நாசச் சரீரத் திருக்குஞ்
சரீரிதனே நால்வேத மாவாக்கியம்
நீசச்சிதாநந்த மென்றிடினு மாசிரியர்
நீபிரம மாகு மெனினும்
மாசற்ற சச்சிதா நந்தநா
னென்னவிவன் மன்னுமநு பவமெங்ஙனே
கோசப் புரங்களை யிடித்துத்
தகர்க்குமத குஞ்சரக் குருநாதனே. 213

சென்மாந்த ரஞ்செய்த வினைகளுட
றருமெனிற் செல்கால மிவனுண்டலோ
கன்மாநு பவநரக சொர்க்கமெனில்
வருகின்ற காலத்து மிவனுண்டலோ
உன்மாத யாதனு வுடல்கடவு
ளுடன்மநுட வுடன்மாறி மாறியழியும்
தன்மாய வுடல்கெடினு மிவனிருப்
பதுகொண்டு சத்தென்ப தொக்குமகனே. 214

இருளாக மூடுஞ் சுழுத்தியி
லிராத்திரியி லிரவிசுட ரற்றபொழுது
மருளாம லிருளையும் பொருளையுந்
தெரிகின்ற வகைகொண்டு சித்தாகுமே
பெருவாழ்வு மிக்கதா னேதன்னி
டத்தினிற் பேராத பிரியமதனால்
அருகாத பிரியஞ் சுகத்தில்வரு
மாதலா லாநந்த மாமைந்தனே. 215

அன்னபா னுதிசுக சாதனம
தாகையா லார்க்கும்வெகு பிரியமாகும்
இன்னவா றுன்மாவு மாநந்த
சாதன மெனக்கருதல் பொருளல்லவே
சொன்னவான் மாவையொரு சுகசாத
னங்களொடு சொல்லுவா யாகின்மகனே
உன்னதா நந்தம்வே றேதநுப
விப்பதா ருபயவான் மாவுமுளவோ. 216

விடயசுக மதில்வருதல் பிரியமாத்
திரமாகும் வெகுபிரிய மான்மாவிலாம்
விடயசுகம் வருபிரிய மாறிவரு
மான்மாவில் வெகுபிரிய மாறுதுகாண்
விடயசுகம் விடலுமாங் கொளலுமா
மான்மாவை விடுவதெவர் கொள்வ தெவர்பார்
விடயசுக போகங்கள் விடுமவனை
யவனால் விடப்படா தொருநாளுமே. 217

வேகின்ற கோபங்க ளாலென்னை
நான்கொன்று விடுகிறே னென்றுசிலபேர்
சாகின்ற படியினாற் றன்னையே
தான்கொன்று சாவனெனல் சங்கையலவே
தேகந்த னைக்கொல்லு மவனால்
விடப்பட்ட தேகமவ னல்லமகனே
ஆகந்த னிற்கோப மலதுதனை
யொருநாளு மான்மா வெறுப்பதிலையே. 218

தாகப்ப டும்பொருளி லும்மகன்
பிரியமாந் தனயனிலு முடல்பிரியமாம்
ஆகத்தி லும்பிரிய மிந்திரிய
மாங்கரண மதனிலும் பிரியமுயிராம்
ஏகப்பி ராணனிலும் வெகுபிரிய
மான்மாவி லிந்தவான் மாமுக்கியம்
ஊகத்தி னூற்கௌண மித்தைகர்த்
தாமூன்று மோரொன்றி லதிகமகனே. 219

கெடலான பொழுதிவன் காணிக்கு
மகனான கௌணவான் மாமுக்கியம்
விடலாத வுடலம் பரிக்குநா
ளுடலான மித்தையான் மாமுக்கியம்
திடமான நன்மைகதி வேண்டினாற்
கர்த்தனுஞ் சீவவான் மாமுக்கியம்
சடமாயு முத்தியினின் ஞானவான்
மாவான தானே மகாமுக்கியம். 220

புலியுமநு கூலமெனி லிட்டமாம்,
பகைசெயிற் புதல்வனெனி னும்வெறுப்பாம்
உலகிலிரு வகையுமல் லாதபுல்
லாதியி லுதாசீன மாமாதலான்
மலினமறு சின்மயன் பலவகையு
மிப்படி மகிழ்ச்சியில் விருப்பமிகழான்
அலகிலா நந்தவடி வாகுமுன்
சொரூபத்தை யாராய்ந்து பார்மைந்தனே. 221

மானஞ்சி றந்தகுரு நாதனே
யாநந்த வகைகளைத் தனேயென்னிலோ
ஞானந்தி கழ்ந்தபிர மாநந்தம்
வாசனு நந்தம்விட யாநந்தமென்
றுநந்த மூன்றுவித மெட்டுவகை
யென்பர்சில ரவ்வைந்து மிதிலடக்கம்
யானந்த வகைசொலக் கேண்மைந்த
னேயெட்டு மிஃதின்ன தின்னதெனவே. 222

போகத்தில் வருசுகம் விடயசுக
நித்திரைப் போதுளது பிரமசுகமாம்
மோகத்த னந்தலிற் சுகம்வாச
னேச்சுக முழுப்பிரிய மான்மசுகமாம்
யோகத்தி லுளதுமுக் கியசுக
முதாசீன முற்றசுக நிசசுகமதாம்
ஏகத்தை நோக்கலத் துவிதசுகம்
வாக்கிய மெழுந்தசுக ஞானசுகமே. 223

(எழு சீர்விருத்தம்)

இவ்வா றுரைசெயுஞ் சுகபே தங்களி
னியல்பா மவைசொல மகனேகேள்
ஒவ்வா நனவினி லுழல்வா னிடர்கெட
வுறங்குஞ் சயனம துறுநேரம்
செவ்வா மனமக முகமா மதிலொளிர்
சித்தின் சுகநிழல் சேருங்காண்
அவ்வா றிவனுள மகிழ்வா மநுபவ
மதுதான் விஷயசு காநந்தம். 224

ஈனந் தருசுக விடயந் திரிபுடி
　யிடரா மெனமன மசையாமல்
சேனந் தனது குலாயந் தனில்விழு
　செயல்போ னித்திரை செறிசீவன்
தானந் தமில்பர னுடனொன் றுவனொரு
　தனேயல் லதுபிற நினேயாமல்
ஆநந் தமயனு மாவன் சுகமிகு
　மதுதா னுயர்பிர மாநந்தம். 225

தூங்குஞ் சுகமது பிரமச் சுகமெனல்
　சுருதிப் பொருள்விழி துயில்வோர்கள்
தாங்கும் மலரணை நன்ரு கச்சிலர்
　சம்பா திப்பது தானுகம்
தீங்குந் நன்மையு மாண்பெண் முறைமையுந்
　தெரியா தமளிசெய் பொழுதேபோல்
ஆங்குள் வெளிகளு மறியா வநுபவ
　மதனு லதுபிர மாநந்தம். 226

உதவும் புவியினி லொருவன் னநுபவ
　மொருவன் மனதினி லுதியாதே
மதியுங் கெடுகிற துயில்கொண் டாநந்த
　மயனன் ருேசுக முறுகின்ருன்
இதுவிஞ் ஞான மயனது சிந்தையி
　னினேவாய் வந்திட லழகன்றே
சுதைவிண் ணேர்புகழ் குருவே நீரிது
　சொல்லீர் சகலமும் வல்லீரே. 227

நெய்யும் வெண்ணெயு மிருபேர் களுமறி
　நினேவிற் பிறிவறி வினிலில்லே
செய்யுந் நனவினி லிறுகும் மனதொடு
　சேருஞ் சின்மய விஞ்ஞானன்
நையுந் துயர்மன நழுவும் பொழுதுணர்
　ஞானச் சுகமுனு மாநந்தன்
பெய்யுந் துளிகளு நீருங் குளமொடு
　பாகும் போலிவர் பிரிவன்றே. 228

ஒன்று கியபிர மாநந் தச்சுக
மொழிவா னேன்வெளி வருவானேன்
என்றுன் முன்செய்த கருமம் வெளியினி
லிழுக்குஞ் சுழுத்திவிட் டெழுந்தோனும்
நன்று யினசுக மகலான் வெளியிலு
நடவான் மறதியும் பெறமாட்டான்
அன்று மெனவிருந் துறங்குஞ் சிலகண
மதுவே வாதனை யாநந்தம். 229

அந்தக் கணமுட லகமென் றிடர்களி
லலைந்தே சுகந்தனை மறந்தேபோம்
முந்தைச் செயும்வினை சுகதுக் கந்தரு
மோனம் முறுநடு வடிவிற்காண்
எந்தப் புருடனு மொருசிந் தையுமற
விருந்தே னெனலநு பவமாகும்
இந்தப் படிதனு தாசீ னச்சுக
மிதுவே நிசமெனு மாநந்தம். 230

நிசமா னதுமுக் கியமோ குடத்துள
நீரன் றேவெளி யீரந்தான்
வசமா வகங்கர மறைந்தா னிசமது
படிந்தான் முக்கிய வகையாகும்
திசையார் திரிசய மறியா தேதுயில்
செறியா தேயுட றறிபோல
அசையா தேமதி சமமா கியநிலை
யதுதான் முக்கிய வாநந்தம். 231

மனுடன் மனுடகந் தருவன் றேவநன்
மாகந் தருவனெண் பிதிரோடே
பனுமா சானர்கள் கருமத் தேவர்கள்
பகர்முக் கியரிந் திரனுசான்
கனமார் பிரசா பதியென் விராட்டுப்பொன்
கர்ப்பப் பிரமனென் றின்னோர்கள்
பினவா நந்தங்க ளுரையாம் பிரளய
வெள்ளக் கடல்பிர மாநந்தம். 232

எவனு கிலுமிந்தத் துரியா தீதத்தி
லேழாம் பூமியி லிருந்தானேல்
அவனு ரதன்சுகன் சிவன்மா லயன்முத
லறிவோ ரநுபவ சுகபோதன்
விவகா ரதிர்சய மிதுவே யநுபவ
மெனமுன் சொல்லிய விவகாரி
உவமா னமுமறி மகனே யவனடி
யுதிரும் பொடிகளென் முடிமேலே. 233

(அறுசீர் விருத்தம்-வேறு)

இந்தவா றைந்துசுகஞ் சொல்லினோம்
வித்தைசுக மினிமேற் சொல்வோம்
முந்தமா யையுஞ்சச்சி தாநந்தப்
பொருளுமே மொழியும் போதில்
அந்தமா மத்துவித சுகமான்ம
சுகமிரண்டு மங்கே சொன்னோம்
தொந்தமாற் றியமகனே யின்னமுனக்
கையமுண்டேற் சொல்லு வாயே. 234

குகன்றனையு மெனையுமுல கினையுமீன்
றளித்தருளுங் குருவே கேளீர்
புகன்றசச்சி தாநந்தப் பதங்கடனித்
தனியாகிப் பொருள்வே றானல்
உகண்டமன முறைப்பதெங்ஙன் பரியாய
பதங்களைப்போ லுறவு காணேன்
அகண்டமா யொருசுவையாய்த் தேனீக்கூட்
டியமதுவா யறிவிப் பீரே. 235

குளிரிளகல் வெண்மையென்ற பதங்களினு
னீர்மூன்று கூறு யிற்றே
ஒளிதவனஞ் செம்மை யென்ற பதங்களா
லக்கினியு மொருமூன் றுமோ
வெளிமுதலாஞ் சகமசத்து மூடமிட
ரெனப்பிரித்து விலக்கி வேதம்
எளிதறிய முரண்மொழிந்த சத்தாதி
யெனும்பிரம மேகந் தானே. 236

நித்தியம்பூ ரணமேகம் பரமார்த்தம்
பரப்பிரம நிதாநஞ் சாந்தம்
சத்தியங்கே வலந்துரியஞ் சமந்திருக்குக்
கூடத்தன் சாட்சி போதம்
சுத்தமிலக் கியஞ்சநா தநஞ்சீவன்
தத்துவம்விண் சோதி யான்மா
முத்தம்விபு சூக்குமமென் றிவ்வண்ணம்
விதிகுணங்கண் மொழியும் வேதம். 237

அசலநிரஞ் சநமமிர்த மப்பிரமே
யம்விமலம் வசநா தீதம்
அசடமநா மயமசங்க மதுலநிரந்
தரமகோ சரம கண்டம்
அசமநந்த மவிநாசி நிர்க்குணநிட்
களநிரவ யவம நாதி
அசரீர மவிகார மத்துவித
மெனவிலக்கா மநேக முண்டே. 238

இன்னவகை விதிவிலக்குக் குணங்கணன்றாய்ச்
சேர்ந்தொருமித் தெல்லாங் கூடிச்
சொன்னபொரு ளொன்றன்றி யிரண்டில்லை
யொருபொருளைச் சொல்லுஞ் சொற்கள்
பின்னபத மாமதனுற் சத்தாதி
குணப்பொருளாம் பிரம மேகம்
அன்னபொரு ளொருமையறிந் தகண்டபரி
பூரணமா யாவாய் நீயே. 239

நிற்குணவத் துவின்குணங்க ளுரைப்பதுதாய்
மலடியென நிகரென் றதே
சற்குணனே வத்துநிலை யுரையாம
லறியவல்ல சதுர ருண்டோ
நற்குணவே தங்களிந்தச் சீவன்முத்தி
பெறப்பிரம ஞானந் தோன்றச்
சொற்குணங்கள் பிரமத்தின் குணங்களன்று
பிரமமாஞ் சொரூபந் தானே. 240

மோகவிருள் கெடக்கோடி யருணனென
　　வருகுருவே மொழியக் கேளீர்
ஏகபரி பூரணமா மென்சொருப
　　மென்னுளத்தி லிருக்கும் வண்ணம்
ஆகமங்கள் சொன்னபடி யென்னையகண்
　　டார்த்தமா வறிந்தே னையா
ஊகமுமொத் திடவுரைத்தாற் பசுமரத்தி
　　லாணிபோ லுறைக்கு நெஞ்சே. 241

சத்தேசித் தாகுமய லெனிலசத்தா
　　மசத்ததனாற் சாட்சி யெங்கே
சித்தேசத் தாகுமய லெனிற்சடமாஞ்
　　சடங்களுக்குத் திதியு மில்லை
ஒத்தேதோன் றியசத்துஞ் சித்துநல்ல
　　சுகமாகு மூகத் துக்கோர்
வித்தேயன் னியமாகிற் சடமசத்தாஞ்
　　சுகாநுபவம் விளைந்தி டாதே. 242

வீயாத சத்துமுன்னம் விளங்குவது
　　தன்னாலோ வேறொன் றாலோ
வாயால்வே றெனிலதுவு மசத்தோசத்
　　தோவசத்தேன் மலடி மைந்தன்
பேயாகா ரியஞ்செயுமோ சத்தெனவிப்
　　படியதையும் பிரித்துச் சொன்னால்
ஓயாத வவத்தையாங் குதர்க்கவிகற்
　　பங்களைவிட் டொழிந்தி டாயே. 243

சுருதியுத்தி யொத்ததுபோ லநுபவமுங்
　　கேள்சுழுத்திச் சுகவா நந்த
மிருதிவடி வாதலிலவ் வாநந்த
　　மேயறிவாம் வேறங் கில்லை
கருதுபிர ளயஞ்சுழுத்தி யிரண்டிலுநீ
　　யிருந்திருளைக் காண்கின் றாயே
இருதயத்திப் படிநோக்கி யேகபரி
　　பூரணமா யிருந்தி டாயே. 244

பலகலையு முணர்ந்தகுரு மொழிந்தபடி
யிவனுமநு பவம்வி டாமல்
பலமலரின் மதுப்போலச் சச்சிதா
நந்தமொன்றும் பரமார்த் தத்தைப்
பலபொழுதுங் கண்மூடிச் சமாதியிருந்
தான்விழித்துப் பார்த்த போது
பலவடிவாஞ் சராசரசித் திரங்களெலாந்
தோன்றுமொரு படமா னனே. 245

இதயமொத்த சற்குருவே நமக்கிதுவே
விநோதமன்றி யினிவே றுண்டோ
அதையுரைத்து மதைநினைத்து மிருப்பதன்றே
ஞானிகளுக் கான நீதி
முதலுரைத்த துரியாதீ தமுமேழாம்
பூமியுமுக் கியமா மென்ற
பதமுமதன் வகையுமெனக் கெளிதாகத்
தெளியும்வண்ணம் பணித்தி டீரே. 246

வினவுமிடத் தஞ்ஞான பூமிகளேழ்
ஞானபூ மிகளே ழென்பார்
இனியவற்று ளஞ்ஞான பூமிகளே
ழையுமுந்தி யியம்பக் கேளாய்
தனிவித்துச் சாக்கிரஞ்சாக் கிரமகா
சாக்கிரஞ்சாக் கிரத்தைச் சார்ந்த
கனவுகனுக் கனவுசாக் கிரஞ்சுழுத்தி
யென்றெழுபேர் கணித்தார் மேலோர். 247

முந்துவகண் டத்தெழுமோ ரறிவுமாத்
திரமதுதான் முதல்வித் தாகும்
இந்தவறி விற்பண்டில் லாவகந்தை
முளைபோலா மிதுந னவாம்
வந்துவந்து பிறவிதொறு மகமமதை
வளருமது மகாந னவாம்
நந்துமகங் கொடுநனவின் மனோராச்சி
யஞ்செயலே நனுக்க னவே. 248

உண்டுறங்கி மனோராச்சி யஞ்செயல்சொப்
பனமெனும்பே ருடைய தாகும்
பண்டுகளுக் கண்டுமறந் ததைமீண்டு
நினைப்பதுசொப் பனந,னுவாம்
மண்டுமிருண் மூடுவது சுழுத்தியா
மஞ்ஞான வகைகள் சொன்னோம்
விண்டுநிறை முத்திதரு ஞானபூ
மிகளேழும் விளம்பக் கேளாய். 249

புலவர்புகழ் முதற்பூமி சுபேச்சைவிசா
ரணையிரண்டாம் பூமி யாகும்
நலதனுமா னசிமூன்றும் பூமிசத்து
வாபத்தி நாலாம் பூமி
சொலுமசம்சத் திப்பேரும் பதார்த்தாபா
வனைப்பேருந் துரியப் பேரும்
மலினமறு மகனேயைந் தாறேழு
பூமிகளா வகுத்தார் மேலோர். 250

துற்சங்க நிவிர்த்திவந்து சிவஞானம்
விரும்புவது சுபேச்சை யாகும்
நற்சங்க மொழிவினவி ஞானநூல்
பழகல்விசா ரணையா நம்பி
முற்சங்க வேடனைகள் விடறனுமா
னசியிந்த மூன்றி னுலும்
சற்சங்க மனதிலுண்மை யறிவுதித்தல்
சத்துவா பத்தி தானே. 251

தத்துவத்தின் மனமுறைத்து மித்தையெலா
மறத்தலசம் சத்தி யாகும்
அத்துவிதா நந்தம்வருந் திரிபுடிபோம்
பதார்த்தாபா வனைய தாகும்
வத்துநிலை யிருந்தபடி யிருந்தமவு
னசுபாவந் துரிய மாகும்
இத்துரிய பூமியைமுன் றுரியாதீ
தப்பதமென் றதுவுங் கேளாய். 252

முற்புவிமூன் றினுமுலகந் தோன்றுதலாற்
சாக்கிரமா மூன்றற் கப்பால்
சொற்பனமா மதுவுமெள்ள நழுவுமைந்தாம்
பூமியே சுழுத்தி யாகும்
அற்புதமாஞ் சுகாநுபவ மிகுமாறும்
புவிதுரிய மதற்கப் பாலோர்
கற்பனையி லாதவிட மதீதமென்று
மௌனமாக் காட்டும் வேதம். 253

துரியநிலந் தனைத்துரியா தீதமெனின்
மயக்கமென்று சுருதிமே லோர்
அரியதொரு விதேகமுத்தி யதீதமென்பா
ரதுகணக்கி லாறும் பூமி
மருவுசுழுத் தியிற்காட சுழுத்தி யென்பா
ரென்பதுநீ மனத்திற் கொள்வாய்
பெருமைதரு ஞானபூ மியின்விகற்ப
மின்னமுண்டு பேசக் கேளாய். 254

முன்னிலங்க ளேறியமூ வருமப்பி
யாசிகளா முத்த ரல்லர்
பின்னிலங்கள் வரன்வரியான் வரிட்டனெனுஞ்
சீவன்முத்தர் பேத மாகும்
சொன்னநடுப் பூமிவந்த ஞானிகளே
பிரமவித்தாந் தூய முத்தர்
இன்னமுமப் பூமிகளின் பெருமைதனை
நீயறிய யான்சொல் வேனே. 255

நாலாம்பூ மியில்வருமுன் மூன்றுபூ
மியுமடைந்து நடந்து மாண்டோர்
மேலான பதமடைந்து பிறந்துமெள்ள
மெள்ளவந்து வீடு சேர்வார்
மாலான பவத்தில்விழார் முதற்பூமி
கிடைப்பதுவே வருத்த மைந்தா
காலான முதற்பூமி கைவந்தான்
முத்தியுங்கை வந்த தாமே. 256

இப்புவியி லிஞ்ஞான பூமியொன்றி
லிரண்டிலடைந் திருந்தா ராஞல்
அப்புருடர் மிலேச்சரா கிலுமுத்தர்
குருபாதத் தாணை மெய்யே
தப்புரையென் றவர்கெடுவார் நடுவான
மறைகளைநீ சங்கி யாதே
செப்புமொழி வழிதிடமா யகம்பிரம
மென்றிருந்து தெளிந்தி டாயே. 257

பொல்லாத மிலேச்சருக்கும் விதேகமுத்தி
தருஞான பூமி யென்று
நெல்லாகி முளைக்குமெனைத் தண்டுலமாக்
கியகுருவே நீர்சொன் னீரே
இல்லாளுங் குடும்பம்விட்டுச் சந்நியா
சம்புகுந்தே காங்கி யானேர்
அல்லாமன் முத்திபெரு ரென்றுசிலர்
சொலுமயக்க மகற்று வீரே 258

சிட்டர்புகழ் மகனேநீ சங்கித்த
சங்கைநன்று தெரியக் கேளாய்
கட்டழியுந் துறவுநால் வகையாகு
மவைகளுக்கங் காகும் பேர்கள்
பட்டதுயர் கெடுங்குடீ சகம்வெகூ
தகமஞ்சம் பரம வஞ்சம்
விட்டகலுந் துறவுக்கு விராகங்கா
ரணமின்றி வேட மன்றே. 259

மந்தமுந்தீ விரமுந்தீ விரதரமு
மெனமூன்று வகைவி ராகம்
வெந்துயரம் வரும்பொழுது குடும்பத்தை
வெறுத்துவரும் விராக மந்தம்
இந்தவுட லளவுமனை தனம்வேண்டா
மெனவிடறீ விரமென் பார்கள்
அந்தணஞர் மித்தையென விடலதுதீ
விரதரமா மறிந்தி டாயே. 260

பாவிமந்த விராகத்திற் சந்நியா
சங்க ளொன்றும் பலித்தி டாதே
தீவிரத்திற் குடீசகமும் வெகூதகமு
மென்றிரண்டு திறங்க ளுண்டாம்
தாவிநடந் திடத்திடமி லாதவர்க்குக்
குடீசகமுஞ் சகங்க ளெங்கும்
மேவிநடந் திடத்திடமுள் ளவர்க்குவெகூ
தகமுமென விதித்தார் மேலோர். 261

இருவகைதீ விரதரத்து மஞ்சனென்றும்
பரமாஞ்ச னென்றுஞ் சொல்வர்
வருமஞ்ச னுக்குமுத்தி சத்தியலோ
கத்தின்றி வாரா தென்பார்
பரமாஞ்ச னுக்குமுத்தி யிவ்வுலகின்
ஞானத்தாற் பலிக்கு மென்பார்
திரமருவும் பரமாஞ்சன் ஞுனுமிரு
வகையாகுஞ் செப்பக் கேளாய். 262

சிஞ்ஞாசு ஞானவா னென்றிரண்டு
பேர்களவ ரிற்சிஞ் ஞாசு
மெய்ஞ்ஞான பூமியின்முன் மூன்றுபூ
மியுணடக்கும் விவேகியா ஞேன்
சுஞ்ஞான வானென்போன் சீவன்முத்தி
யடைந்திருக்குந் தூய மேலோன்
அஞ்ஞான மகலுமந்தச் சிஞ்ஞாசு
மிருவகையா மதுவுங் கேளாய். 263

பந்தமனை துறந்துசில ரதிதிகளா
யிருந்தடைவர் பரம ஞானம்
அந்தணர்மன் னவர்வணிகர் சூத்திரரா
யிருந்துசில ரடைவர் ஞானம்
இந்தவகைச் சாத்திரத்து முலகத்து
நடப்பதுகண் டிருந்து மைந்தா
சிந்தனையின் மயக்கமென்னே சுருதியுத்தி
யநுபவத்தாற் றெளிந் திடாயே. 264

(அறுசீர்விருத்தம்-வேறு)

பிறந்ததுண் டானு லன்றோ
 பிறகுசா வதுதா னுண்டாம்
பிறந்ததே யில்லை யென்னும்
 பிரமமா வதுவு நானே
பிறந்தது நானென் றாகிற்
 பிரமமன் றந்த நானே
பிறந்தது மிறந்த தற்ற
 பிரமமா நானே நானே. 265

நானென்ற பிரம மான
 நானேநா னறியே னென்றால்
நானென்ப தேது பின்னை
 நம்முடைப் புந்தி யென்னில்
தானது மயக்கந் தன்னிற்
 சாகுமே சாவா தாகி
நானென நிறைந்தி ருந்த
 ஞானமா நானே நானே. 266

நிறைந்தவா றெந்த வாறு
 நிலைதெரிந் திலனென் றாயேல்
அறிந்ததாஞ் சுழுத்தி தன்னி
 லாநந்த மதுவே யாகும்
குறைந்ததற் காநந் தந்தான்
 குவலயந் தன்னி லில்லை
நிறைந்ததே யிந்த வான்மா
 நிதானமிவ் வறிவு தானே. 267

மனத்தினு லெண்ணித் தானே
 வந்ததிவ் வுலக மாகும்
நினைத்திடி லநேக லோக
 நிற்பதவ் வறிவி லன்றோ
அனைத்தையுங் கடந்தப் பாலு
 மந்தமற் றறிவி தாமென்
றெனைத்தனி விசாரித் திட்டா
 லேகமாய் நிறைந்தோ னானே. 268

அந்தவா றிருந்து கொண்டே
யாநந்த மநுப விக்க
எந்தவா றிருந்து கொண்டா
லெனக்கிது தெரியு மென்னில்
இந்தமூன் றவத்தை தம்மு
ளெழுந்திடும் விருத்தி நீக்கில்
அந்தவா றிருந்து நீயு
மாநந்த மடைய லாமே. 269

வாதனு வசத்தி னலே
வருகின்ற விருத்தி யெல்லாம்
ஏதினு லடக்க லாகு
மென்றுதான் விசாரஞ் செய்யில்
போதமா மிராசன் றனுய்ப்
புந்தியைம் புலன்க ளெல்லாம்
தாதரா யிருக்கப் பெற்றுற்
சகலமு மடங்குந் தானே. 270

விருத்திக ளடக்க வின்னம்
விநோதமாம் யோகத் தாலே
துருத்திபோ லூது மூச்சைச்
சுகமுட னடக்கி னிற்கும்
கருத்ததற் கில்லை யென்னிற்
காரண சரீர மாகிப்
பெருத்ததோ ரவித்தை தன்னைப்
பிடுங்கிடி லடங்குந் தானே. 271

காரண சரீரந் தன்னைக்
களைவதெவ் வாறென் றேதில்
ஆரணம் பொய்சொல் லாதே
யதன்பொரு ளகத்தி லுய்த்துப்
பூரண மாகு மென்மேற்
புவனங்க டோன்று மென்று
தாரணை வந்த தாகிற்
றரித்திடு மவித்தை யெங்கே. 272

அப்படி யிருக்கச் சித்த
மலேதலால் விவகா ரத்தில்
எப்படி கூடு மென்னி
லென்னேவிட் டொன்று மில்லே
இப்படி கண்ட வெல்லா
மென்மய மென்க ளுப்போல்
கற்பித மென்று தானே
காண்கின்ற சித்து நானே. 273

சித்துநா னிறைந்தோ னென்ற
திடமற வாதி ருந்தால்
எத்தனே யெண்ணி ளுலு
மேதுசெய் தாலு மென்ன
நித்திரை யுணர்ந்த பின்பு
நிற்கின்ற கனுவே போல
அத்தனே யும்பொய் தானே
யாநந்த வடிவு நானே. 274

நானென வுடலேத் தானே
நம்பினே னநேக சன்மம்
ஈனராய்ப் பெரியோ ராகி
யிருந்தவை யெலாமிப் போது
கானலில் வெள்ளம் போலக்
கண்டுசற் குருவி ளுலே
நானென வென்னேத் தானே
நம்பியீ டேறி னேனே. 275

என்னபுண் ணியமோ செய்தே
னேதுபாக் கியமோ காணேன்
நன்னிலந் தனிலெ ழுந்த
நாரணன் கிருபை யாலே
தன்னிய ளுனே ளுனுத்
தரீயத்தை வீசு கின்றேன்
தன்னிய னின்னு நானே
தாண்டவ மாடு கின்றேன். 276

தத்துவ ஞானம் வந்த
  சந்தோட வதிச யத்தால்
நித்தமா டுவன்கா ணென்ற
  நிலைமுன்ன மேய றிந்த
சத்திய மதனு லன்றோ
  தாண்டவா வென்ற ழைத்தார்
அத்தனை மகிமை யுள்ளோ
  ரன்னையும் பிதாவுந் தாமே. 277

வந்ததோ ரிவ்வா நந்த
  மகிழ்ச்சியா ருடன்சொல் வேன்யான்
சிந்தையி லெழுந்து பொங்கிச்
  செகமெலா நிறைந்து தேங்கி
அந்தமில் லாத தாயிற்
  றப்படி குருவே தாந்த
மந்திர மருளு மீசன்
  மலரடி வணங்கி னேனே. 278

வித்தியா நந்த மிந்த
  விதமென விளம்பி னேமே
பத்தியா லிந்த நூலைப்
  பார்த்தநு பவித்த பேர்கள்
நித்திய தரும நிட்டை
  நிலைதனை யறிந்து சீவன்
முத்தியை யடைந்தி ருந்த
  முனிவர ராகு வாரே. 279

ஆரணப் பொருளாம் வித்தி
  யாநந்தம் விளங்க வேதும்
காரணங் குறைவி லாமற்
  கைவல்ய நவநீ தத்தைப்
பூரண மாக்க வேண்டிப்
  பூர்வமா நன்னி லத்தில்
நாரண குருந மக்கு
  நவின்றனர் கனவில் வந்தே. 280

குலவுசற் குருவின் பாதக்
    குளிர்புனற் தலைமேற் கொண்டார்
உலகினிற் றீர்த்த மெல்லா
    முற்றபே றடைவார் போல
நலமெய் யாகிய கைவல்ய
    நவநீத நூலைக் கற்றோர்
பலகலை ஞான நூல்கள்
    படித்தஞா னிகளாய் வாழ்வார். 281

—★சம்பூர்ணம்★—

## பாகம் - 1

# தத்துவ விளக்கப் படலம்

மோட்சத்தை விரும்பும் முமுட்சுக்களுக்கு இருக்க வேண்டிய தகுதிகள் நான்காகும். அவை:

(1) என்றும் நிலைத்திருக்கக் கூடிய வஸ்து எது, நிலையற்றது எது என்ற விவேக அறிவைப் பெற்றிருக்க வேண்டும்.

இது 'நித்திய - அநித்திய வஸ்து விவேகம்' எனப்படுகிறது.

(2) இகபர சுகங்கள் நிலையற்றவை; அவை துன்பத்திற்குக் காரணமானவை என அறிந்து அவற்றில் ஆசையற்றிருத்தல் வேண்டும்.

இது 'இக-பரபோக விராகம்' எனப்படுகிறது.

(3) சமம், தமம், உபரதி, திதிட்சை, சமாதானம், சிரத்தை என்ற ஆறு குணங்களும் பொருந்தியிருக்க வேண்டும்.

இது 'சமாதி ஷட்சம்பத்து' எனப்படுகிறது.

'சமம்' எனப்படுவது மனம், புத்தி, சித்தம், அகங்காரம், உள்ளம் என்ற குணங்கள் ஐந்தும் மனதைத் திரிய விடாதபடி அவற்றைத் தடுத்து நிறுத்துவதாகும்.

'தமம்' எனப்படுவது இந்திரியங்கள் விஷய சுகங்களை நாடாதபடி தடுத்து நிறுத்துவதாகும்.

'உபரதி' எனப்படுவது பெண், பொன், மண் ஆகியவற்றிலுள்ள ஆசைகளை விட்டுவிடுவதாகும்.

'திதிட்சை' எனப்படுவது சுகதுக்கங்களைச் சமசித்தத்துடன் சகித்துக் கொள்வதாகும். அவை முன்வினைப் பயனால் வந்தவை என அறிந்து தெளிய வேண்டும்.

'சமாதானம்' எனப்படுவது சித்தத்தை ஞான விஷயங்களிலும் தெய்வ சிந்தனையிலும் எப்போதும் நிலைத்திருக்கச் செய்வதாகும்.

'சிரத்தை' எனப்படுவது ஞான நூல்களில் நம்பிக்கையும், ஞான குருவின் வாக்கில் நம்பிக்கையும் அவரிடம் பூரண பக்தியும் கொள்ளுவதாகும்.

(4) 'முமுட்சுத்துவம்' எனப்படுவது தீவிரமான மோட்ச இச்சை கொண்டவர்களாக இருப்பதாகும்.

ஞான மார்க்கத்தில் இந்த நான்கு சாதனங்கள் பூரணமாகப் பெற்றவர்க்கே ஜீவப்ரம்ம ஐக்கிய ஞானம் சந்தேக விபரீதமின்றி உண்டாகும்.

இப்படி ஞான சாதனம் நான்கும் கொண்ட அதிகாரியானவன் சம்சாரமாகிய தேகம், புவனம், தெய்வமெனப்படும் சூழ்நிலையாலும் தவிக்கப் பெற்று ஞானதீர்த்தமாகிய குருவை நாடி, அவரையடைந்து, என்னை இம்மாய வாழ்வினின்றும் காப்பாற்ற வேண்டுமென்றான். அவரும் உபாயமொன்றுண்டு என்று அச்சீவனை உள்நோக்கியும், தேகத்தைத் திருக்கண் நோக்கியும், ஸ்பரிசித்தும் சொல்வார்:

மகனே, தன்னை மறந்தவன், சம்சாரமென்னும் கனாவில் பிறந்திறந்து அநாதியான காலச்சக்கரத்தின் பிரமையில் சுழற் காற்றுற்ற காய்ந்த சரகு போல் திரிவன். ஆனால், இப்பிரமையனைத்தும் தன் நிஜ சொரூபத்தை அறியும் மட்டும் தான். தன் நிஜ சொரூபமான, ஆதாரமான, கேவல உணர்வுருவாம் பிரம்மத்தை ஆன்மவிசார வாயிலாகக் கண்டவுடனே, அதுவேயாகி இப் பிறப்பிறப்பு எனும் கனவினின்றும் விடுபடுவன்.

இதைக் கேட்ட சீடன், ''தன்னை அறியாத மக்கள் இப்புவியில் உண்டோ? என்னை நான் அதே போல் அறிந்தும் நான் உழல்வானேன் ஐயா?'' என்றான்.

குருவானவர், மகனே, எவனொருவன் 'இது தேகம்', 'இது தேகத்தை அறியும் தேகி' என்று உணர்வானோ அவனே தன்னையறிந்தவன் எனப்படுவான், மற்றார் அன்று என்றார். சீடன் அதற்கு, ''ஐயா, தேகியான நான் இவ்வுடலே அல்லாமல் வேறு என்ன?'' என்றதும், அவர் நகைத்து, மகனே! இத்தேகத்தை விட்டு தேகியல்லவென்றால், உன் கனவில் ஒரு தேகம் பொருந்தி அல்லற்பட்டவன் யார் கூறுவாய். மேலும் நீ நனவு என்று கொண்டு வாதாடிடும் உன் அறிவும் உணர்வும் என்னவென்று கூறுவாய் என்றார். சீடனோ, ''இவ்விஷயம் தான் முற்றும் தெளிவாக விளங்கவில்லை, ஐயனே. மங்கலான வெளிச்சத்தில் காணும் விபரீதங்களைப் போல தெளிவாக இதனுண்மை என் மனதினில் உறைக்கவில்லை'' என்றான்.

இதைக் கேட்ட குருவானவர் ஞான உபதேசத்தைத் தொடங்கினார். நேரே விளங்காத தனிப்பிறை காட்டவேண்டி எப்படி ஒருவர் தூலமான மரத்தையும், பின் கிளையையும், பின் இலையையும், பின் நுனியையும் காட்டி, அதன் பின் இதையும் விட்டுவிடும்படி கூறி, நுனிப்பக்கத்தில் வான்பிறை காட்டுவார் போல், சீடனுக்கு விளங்கும் தூல உண்மையிலிருந்து ஆரம்பித்து, அதையே பின்னர் மறுத்து, சூக்குமமான தானாம் ஆன்ம மூலத்தைக் காட்டும் நோக்கத்துடன் உபதேசிக்கலானார்.

**ஆரோபம் (Illusion) – அபவாதம் (Effacement of Illusion)**

ஆரோபம் என்பது ஒரு பொருளை வேறொரு பொருளாகக் காணும் மயக்கமாகும். பழுதைப் பாம்பெனவும், இருட்டில் கட்டையை மனிதனென்றும், கானலை நீரெனவும், ஆகாயத்தை நீலநிறமானதென்றும் காணும் மயக்கமாகும். இது பந்தத்திற்குக் காரணமாகிறது.

அபவாதம் என்பது அனைத்திற்கும் ஆதாரமான பிரம்மத்தை அனுபவ பூர்வமாக அறிந்து தெளிவதாகும். இது மோட்சத்திற்கு ஏதுவாகும். மற்றபடி ஜகத், ஜீவ பரங்கள் ஆகியவை கற்பிதமானவை என உணர வேண்டும்.

**சிருஷ்டி (Creation) :**

பிரம்மத்தில் ஜகத், ஜீவ, ஈஸ்வரன் ஆகியவை உண்டான முறை யுகபத் சிருஷ்டி, கிரம சிருஷ்டி என இருவகையாகக் கூறப்படுகின்றது.

1. யுகபத் சிருஷ்டி (Simultaneous Creation) :

அகண்ட பரிபூரண ஸ்வரூபத்தில் தனு, கரண, புவன போகங்களான அனைத்தும் அப்பரம்பொருளின் 'கிருபா நோக்கத்தாலேயே' மாயா சம்பந்தம் ஏற்பட்டு, 'ஏக காலத்தில்' தோன்றின என்பதாகும்.

இந்த யுகபத் சிருஷ்டியே வேத சம்மதமானது என்று கொள்ளப்படுகிறது.

2. கிரம சிருஷ்டி (Gradual Creation) :

ஆவரண (மறைப்பு) சக்தியிலிருந்து ஆகாயம் உண்டாயிற்று; ஆகாயத்திலிருந்து வாயு உண்டாயிற்று; வாயுவிலிருந்து அக்னி உண்டாயிற்று; அக்னியிலிருந்து அப்பு (நீர்) உண்டாயிற்று; அப்புவிலிருந்து ப்ருத்வி (பூமி) உண்டாயிற்று. இவை வரிசைக் கிரமமாகத் தோன்றின என்பதாகும்.

3. மூலப்ரக்ருதி (Jeeva-unmanifest) :

இது பிரம்மத்திடம் அனாதியாய் உதித்த மாயையாகும்.

இம்மூலப்ருகிருதிக்கு சத்வம், இராஜஸம், தமஸ் என்று மூன்று குணங்களும் உண்டு.

(i). சத்வ குணம் பரிசுத்தமானது. இதற்கு 'சுத்த மாயை' என்று பெயர். இது ஈஸ்வரனுக்கு காரண சரீரமாகும். இதில் பிரம்மத்தின் பிரதி பிம்பம் சிற்சாயைப் போலத் தோன்றும். இதுவே ஜகத் சிருஷ்டிக்குக் காரணமான ஈஸ்வரனாகும்.

ஈஸ்வரன் சத்வகுண மாயையில் உற்பத்தியானவன். அவனுக்கு முக்குணங்களும் உண்டு. இம்மூன்று குணங்களும் ஒருபோதும் சமமாய் இரா. இம்முக்குணங்களால் ஈஸ்வரன்

படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களையும் செய்கிறான்.

(ii). ஜீவர்களின் சிருஷ்டி :

மூலப்ருகிருதியின் இரண்டாவது குணம் ராஜஸம் ஆகும்.

இக்குணத்திற்கு அசுத்த மாயை, அவித்தை, அஞ்ஞானம் என்ற பெயர்களும் உண்டு.

இந்த அசுத்த மாயையில் பிரதிபலிக்கும் பிரம்மத்தின் சாயையே (பிரதிபிம்பம்) ஜீவனாகும்.

அவித்தைகள் பல என்பதால் ஜீவர்களும் பலராவர்.

ரஜோ குணத்தில் உதித்த ஜீவர்களுக்கு மூன்று குணங்கள் உண்டு.

அவை, ராஜஸில் சத்வம், ராஜஸில் ராஜஸம், ராஜஸில் தமஸ் என்றவாறு அமைந்திருக்கும்.

சத்வ குணத்தை முக்யமாகக் கொண்ட ஜீவர்கள் ஞான நாட்டம் உள்ளவர்களாக இருப்பர்.

ரஜோ குணத்தை முக்யமாகக் கொண்ட ஜீவர்கள் உலக விஷயங்களில் மூழ்கிய கர்மிகளாக இருப்பார்கள்.

தமோ குணத்தை முக்யமாகக் கொண்ட ஜீவர்கள் தூக்கம், சோம்பல் போன்ற மந்தத் தன்மை கொண்டவர்களாக இருப்பார்கள்.

(iii). மூலப்ருகிருதியின் மூன்றாவது குணம் தாமஸம் ஆகும். அசுத்தமான இந்த தமோகுணம் இரண்டு சக்திகளாகப் பிரிந்து காணப்படுகிறது.

அவை ஆவரண சக்தி (Veiling of Reality) விட்சேப சக்தி (Multiplicity of Phenomena) என்பனவாகும்.

ஆவரணம் என்பது மறைக்கும் சக்தி.

இது ஆன்மா தன் உண்மை ஸ்வரூபத்தை அறிய முடியாதபடி மறைக்கும் அஞ்ஞானமாகும்.

இந்த அஞ்ஞானம் நீங்கினால்தான் ஞானம் உதிக்கும்.

விட்சேபம் என்பது விளக்கம் அல்லது தோற்றம் என்று பொருள்படும். இறைவனால் அளிக்கப்பட்ட தனு (உடல்), கரண, புவன, போகம் முதலியவையெல்லாம் விட்சேப சக்தியேயாகும். இவை ஆத்மாக்கள் மோட்சமடைய ஏதுவானவை.

**பஞ்ச பூதங்களும் தன்மாத்திரைகளும் :**

ஆகாயம், வாயு, அக்னி, நீர், நிலம் ஆகிய பஞ்சபூதங்களை முறையே அளவிடும் ஓசை, பரிசம், உருவம், சுவை, நாற்றம் என்பவை தன் மாத்திரைகள் எனப்படுகின்றன. ஈஸ்வரனுடைய அபார மகிமையினால் விட்சேப சக்தியிடம் தோன்றியவை இவை.

**அந்தகரணங்கள் :**

உள்ளம், மனம், புத்தி, சித்தம், அஹங்காரம் என்ற ஐந்தும் அந்தக் கரணங்களாகும். இவை கலப்பிலாத பஞ்ச பூதங்களின் சத்வ குணத்தின் ஓர் பாதியிலிருந்து ஏற்பட்டவை. இதையே உள்ளம், புத்தி என்று இரண்டாகவும் கூறுவர்.

**ஞானேந்திரியங்கள் :**

| | | |
|---|---|---|
| சுரோத்திரம் | – | ஓசையை உணர (சப்தம்) |
| துவக்கு | – | ஸ்பரிசத்தை உணர (ஸ்பரிசம்) |
| சட்சு | – | கண்களில் ரூபங்களை அறிய (ரூபம்) |
| ஜிம்ஹ்வை | – | ருசியை அறிய (ரஸம்) |
| கிராணம் | – | வாசனையை உணர – ஏற்பட்டவை (கந்தம்) |

இவை கலப்பிலாத பஞ்சபூதங்களின் சத்வகுணத்தின் மற்றொரு பாதியிலிருந்து ஏற்பட்டவை.

அந்தகரணங்களும் ஞானேந்திரியங்களும் (கூடிய ஏழும்) ஞானம் பெறுவதற்கு ஏற்ற சாதனங்களேயாகும்.

**பஞ்ச வாயுக்கள் :**

வியானன், பிராணன், அபானன், சமானன், உதானன்

ஆகிய இவ்வைந்தும் பஞ்ச வாயுக்களாகும். இவை கலப்பிலாத பஞ்ச பூதங்களின் ரஜோ குணத்தின் ஓர் பாதியில் தோன்றியவை.

**கர்மேந்திரியங்கள் :**

வாக்கு, பாணி, பாதம், பாயுரு, உபத்தம் ஆகிய இவ்வைந்தும் கர்மேந்திரியங்கள் ஆகும். இவை கலப்பிலாத ரஜோ குணத்தின் மற்றொரு பாதியில் தேன்றியவை.

வாயுக்கள் ஐந்தும், கர்மேந்திரியங்கள் ஐந்தும் கிரியா சாதனங்களாகும்.

**தைசதன் (தைஜஸன்)** : மேற் கூறிய பதினேழும் மருவிய ஜீவனுக்கு தைசதன் என்று பெயர்.

**இரணியகர்ப்பன் :** இப் பதினேழும் மருவிய ஈசன் பெயர் இரணியகர்ப்பன் ஆகும்.

**தூல பூதங்கள் :**

சூட்சம பஞ்ச பூதங்களின் 'தமோ' குணத்தில் 'பஞ்சீகரணம்' (பூதங்களின் கலப்பு) ஏற்பட்டு ஸ்தூல பூதம் ஐந்தும் ஏற்பட்டது. ஸ்தூல பூதத்திலிருந்து ஸ்தூலசரீரம் அண்டம், புவனம், போகப் பொருள்கள் ஆகியவை ஏற்பட்டன.

**விஸ்வன் :**

தனி ஜீவனான வியஷ்டி, ஸ்தூல தேகத்தைச் சேர்ந்து அதை அபிமானிக்கும் போது அந்த ஜீவன் விஸ்வன் எனப்படுகிறான்.

**விராட் புருஷன் :**

எல்லா உயிர்களின் தொகுதியான சமஷ்டி ஸ்தூல தேகத்தைச் சேர்ந்து அதை அபிமானிக்கும் போது ஈஸ்வரன் விராட் புருஷன் எனப்படுகிறான்.

ஈஸ்வரனுக்கும், ஜீவர்களுக்கும் உபாதி ஒன்றுதான்.*

ஆனால் ஜீவர்கள் காரிய உபாதியுள்ள வியஷ்டியாவார்கள்.

காரண உபாதி உள்ள ஈஸ்வரன் சமஷ்டியாவான்.

---

*இருக்கும் இயற்கையால் ஈச ஜீவர்கள், ஒரு பொருளே ஆவர் உந்தீபற; உபாதி உணர்வே வேறு உந்தீபற (உபதேச உந்தியார் 24)

கலப்புற்ற (பஞ்சீகரணம் செய்யப்பட்ட) தூலபூதங்களிலிருந்து அண்டம், புவனங்கள், ஸ்தூல தேகம் முதலிய யாவும் உற்பத்தியாயின. பஞ்சீகரணம் உண்டாகும்போது ஒவ்வொரு பூதமும் தன் தமோகுணத்தின் ஒரு பாதியை தன்னிடம் இருத்தி, மீதியை நான்கு பூதங்களுக்கு வினியோகம் செய்கிறது. இப்படியாகக் கலக்கப்பட்ட பூதங்கள் ஒவ்வொன்றிடமும் தன் அம்சம் ஒரு பாதியாகவும், மற்ற நான்கு பூதங்களின் அம்சங்கள் கலந்து மற்றொரு பாதியாகவும் ஏற்படுகிறது. இவையே தூல பூதமாகும்.

இவற்றிலிருந்து ஜீவன்களுக்கு வேண்டிய நான்கு விதமான யோனிகளும் (generating cause), ஏழு வகையான பிறவிகளும் (forms of birth) உண்டாயின.

**ஜீவ உற்பத்தியின் நான்கு வகைகள் :**

ஜராயுஜம் : மனிதர்கள், மிருகங்கள் (Foetus-born)

அண்டஜம் : முட்டையிலிருந்து உதிக்கும் பறவைகள், மீன்வகைகள் முதலியன (Egg-born)

ஸ்வேதஜம் : வியர்வையிலிருந்து உற்பத்தியாகும் பேன், கொசு முதலியன (Larva-born)

உத்பிஜ்ஜம் : விதையிலிருந்து உற்பத்தியாகும் மரம், செடி, கொடிகள் முதலியன (Seed-born)

**ஏழு வகைப் பிறவிகள் :**

தேவர், மனிதர், விலங்குகள், பறவைகள், ஊர்வன, நீர்வாழ்வன, தாவரங்கள்.

மனிதனுக்கு மூன்று வகையான உடல்களும் மூன்று வகையான அவஸ்தைகளும் (நிலைகள்) உள்ளன.

**மூன்று வகை உடல்கள் :**

ஸ்தூல உடல், சூட்சும உடல், காரண உடல் என்பன (Gross, Subtle and Casual bodies).

**மூன்று வித அவஸ்தைகள் (நிலைகள்) :**

ஜாக்ரம் (விழிப்பு நிலை)

ஸ்வப்னம் (கனவு நிலை)
சுழுப்தி (உறக்க நிலை)

இம்மூன்று அவஸ்தைகளும் ஸ்தூல, சூட்சும, காரண சரீரங்களில் அடங்கியுள்ளன.

**பஞ்சகோசங்கள் :**

அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயம் என்பவை பஞ்சகோசங்களாகும்.

இவை ஜீவன் தன் உண்மை ஸ்வரூபத்தை அறிய முடியாதபடி உறைபோல மூடியிருப்பதால் கோசங்கள் எனப்படுகின்றன.

**அபவாத உத்தி :**

நாம் காணும் பிரபஞ்சமெல்லாம் கற்பிதமேயென அறிந்து தெளிவு பெறுவது 'அபவாத உத்தி' எனப்படுகிறது. இதுவே மோட்சமடைய உதவும் உத்தி (மார்க்கம்) யாகும்.

இது பாம்பல்ல, பழுதை என்று அறிவது போல குரு உபதேசத்தாலும், ஞான விசாரத்தாலும், உடல் முதலிய தத்துவங்கள் உண்மையானவையல்ல; அனைத்திற்கும் ஆதாரமான பிரம்மமே உண்மை வஸ்து என அனுபவ பூர்வமாகத் தெளிவு பெறுவதே அபவாத உத்தி எனப்படுகிறது.

ஆவரணம் என்பது மாயா சக்தியாகும். இது ஈசனையும் ஞானிகளையும் தவிர, மற்ற எல்லா ஜீவராசிகளையும் அவர்களின் இதயத்தில் உறையும் கூடஸ்தனை (the Self) அறிய முடியாதபடி மூடி மறைத்துள்ளது. இவ்வாவரண சக்தியே ஜீவர்களுக்கு நீங்காத பிறவித் துன்பத்தைக் கொடுக்கிறது.

தனு, கரண, புவன, போகங்களாகிய (multiplicity of phenomena) விட்சேப சக்தியானது தமோகுணத்தில் உதித்ததேயாகும்; எனினும் இது அறிவு விளக்கம் பெற சாதனமாகிறது. சிரவணம், த்யானம் போன்ற முயற்சிகளால் முக்திபெற இந்த விட்சேப சக்தி உதவுகிறது.

எப்படியெனின் கனவில் சிங்கத்தைக் கண்டவன் பயந்து விழிப்பு நிலைக்கு வந்து தெளிவு பெறுகிறான். இதைப் போலவே பொய்யான விட்சேப சக்தியின் செயல்களான தியானம், சிரவணம் முதலிய செயல்களால் மாயையிலிருந்து விடுபட்டு முக்தி பெறுவது சாத்யமாகிறது.

ஆதார வஸ்து உண்மையானது. ஆரோபம் கற்பிதமானது. துணியும் நூலும் போலவும், ஆபரணமும் பொன்னும் போலவும், கடமும் மண்ணும் போலவும், காரணமின்றி காரியமில்லை.

ஆகையால் ஆரோபத்தால் உற்பத்தியான ஒவ்வொன்றை யும் முறையே ஒடுக்கி முடிவில் பிரம்மமே சாஸ்வதமான வஸ்து என்று அறிவதே அபவாத உத்தியாகும்.

விஷத்தை மாற்று விஷத்தால் நீக்குவதுபோல அசுத்த மாயையைச் சுத்த மாயையால் நீக்கலாம். முடிவில் சுத்த மாயையும் 'பிணம் சுடு தடிபோல' தானும் அசுத்த மாயையுடன் அழிந்து போகும். இவ்வாறு ஜகத்ரூபமான அசுத்த மாயையைச் சித்ரூபமான சுத்த மாயையினால் அழித்துப் பிரம்ம ஞானம் பெறலாம்.

**ஏழு விதமான அவஸ்தைகள் (Seven States) :**

ஆவரணம், விட்சேபம் ஆகிய இருவிதமான மாயையினால் ஜீவர்களுக்கு ஏழுவிதமான அவஸ்தைகள் ஏற்படுகின்றன. அவை:

அஞ்ஞானம் : பிரம்ம ஸ்வரூபமான தன்னை மறந்து இருத்தலே 'அஞ்ஞானமாகும்'.

ஆவரணம் : பிரம்மம் என்று ஒன்று இல்லை; அவ்வாறு இருப்பின் அது காணப்படாதா என்று கூறுகிற மறைப்பே 'ஆவரணமாகும்'.

விட்சேபம் : ஒருவன் தன்னை 'ஜீவன்' என்று எண்ணுவதே விட்சேபமாகும்.

பரோட்ச ஞானம் : குரு உபதேசத்தால் பிரம்மத்தைக் குறிப்பாகத் தெரிந்து கொள்ளுதல் 'பரோட்ச ஞானம்' – மூடப்பட்ட ஞானம் எனப்படும்.

அபரோட்ச ஞானம் : ஆத்ம விசாரம் செய்து சந்தேகம் நீங்கப் பெற்றுத் தான் அத்வைதஸ்வரூபமாக விளங்குவது 'அபரோட்ச ஞானம்' – பிரத்யட்ச ஞானம் எனப்படும்.

துக்க நிவர்த்தி : தான் 'ஜீவன்', 'கர்த்தா', 'போக்தா' (அனுபவிப்பவன்) என்றெல்லாம் கருதுவதை விட்டு, தனக்குப் பிறப்பு இறப்பு உண்டென்ற துக்கமும் நீங்கப் பெறுதலே 'துக்க நிவர்த்தி' யாகும்.

ஆனந்தம் : எல்லாத் துன்பங்களிலிருந்தும் விடுபட்டவனாக, செய்ய வேண்டியதனைத்தையும் செய்து முடித்தவனாக அடையத் தக்கன அனைத்தையும் அடைந்தோம் என்று பூரண திருப்தியடைதலே தடையற்ற 'ஆனந்தமாகும்'.

தசமன் கதை இந்த ஏழு அவஸ்தைகளையும் விளக்குகிறது.

பத்துப் பேர் ஓர் ஆற்றைக் கடந்து அக்கரை சேர்ந்தார்கள். அவர்களில் ஒருவன் ஒன்பது பேரை எண்ணியவன், தன்னையும் சேர்த்துக் கொள்ளத் தெரியாமல் பிரமித்து நின்றான்.

இவ்விதம் எண்ணிக் கணக்குப் பார்த்தவனுக்குத் தன்னைத் தெரியாத மயக்கமே 'அஞ்ஞானமாகும்'.

பத்தாவது மனிதனைக் காணவில்லை; அவன் இல்லை என்பதே அறியாமை நீங்காத 'ஆவரணமாகும்'.

தசமனைக் காணவில்லை என்று துக்கப்பட்டு அழுதது விட்சேபமாகும்.

வழிப்போக்கன் ஒருவன் இவன் புலம்பலுக்குக் காரணம் அறிந்து பத்தாவது மனிதன் இங்கேயே இருக்கிறான் என்று கூறியதைக் குறிப்பாக நினைத்து நம்பிக்கை கொண்டது 'பரோட்ச ஞானமாகும்'.

அவ்வழிப்போக்கன் ஒன்பது பேர்களை எண்ணிய நீயே பத்தாமவன் ஆவாய் என்று கூறவே, தன்னைத் தசமனாகக் கண்டது 'அபரோட்ச' ஞானமாகும்.

அழுகை நீங்கியதே 'துக்க நிவர்த்தியாகும்'.

உண்மை விளங்கி, உள்ளத்தில் சந்தேகம் தீர்ந்ததே 'தடையற்ற ஆனந்தமாகும்'.

**பிரம்மம், ஈஸ்வரன், கூடஸ்தன், ஜீவன் – இவற்றிற்கு விளக்கம் :**

1. பிரம்மம் : எங்கும் நீக்கமற நிறைந்துள்ள சைதன்யமே பிரம்மம் எனப்படுகிறது. இது மகா ஆகாசம் போன்றது.

2. ஈஸ்வரன் : மாயையில் பிரதிபலித்த பிரம்மமும், மாயைக்கு ஆதாரமான பிரம்மமும் சேர்ந்தே ஈஸ்வரன் ஆகும். மேகத்திற்கு இடங்கொடுத்த ஆகாயத்தையும் மேக ஜலத்தில் பிரதிபலித்திருக்கும் ஆகாயத்தையும் சேர்த்து மேக ஆகாசம் என்பதைப் போன்றது ஈஸ்வரன் என்ற பெயர். இதுவே சிருஷ்டி முதலிய பஞ்சக் கிருத்யங்களைச் (படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளுதல்) செய்யும் ஈஸ்வரன் ஆகும்.

3. கூடஸ்தன் : கூடஸ்தன் என்பதும், ஜீவ சாட்சி என்பதும் ஒன்றே. அந்தக்கரணமானது கூடஸ்தனுடைய ஸ்வரூபத்தில் பிரவேசிக்காமல் கூடஸ்தனைப் பிரம்மத்தினின்றும் வேறு பிரித்துக் காட்டுகிறது. இது கடத்திற்குள் இருக்கும் கட ஆகாயம் போன்றது. (கடம் கட ஆகாயத்தின் ஸ்வரூபத்தில் பிரவேசிக் காமல் எங்கும் வியாபித்துள்ள ஆகாயத்தினின்றும் அதைப் பிரித்துக் காட்டுகிறது).

4. ஜீவன் : ஜலத்தின் சலனம் ஜலப்பிரதி பிம்பத்தில் பிரவேசிப்பது போல அந்தக் கரணமானது அதன் ஸ்வரூபத்தில் பிரவேசித்து ஜீவனாகத் தோற்றி, ஜீவனை பிரம்மத்தினின்றும் வேறாகப் பிரித்துக் காட்டுகிறது. இது கட ஜலத்தில் பிரதிபலிக்கும் ஆகாயமும், கடத்தில் உள்ள ஆகாயமும் சேர்ந்து ஜல ஆகாசம் எனப்படுவது போலாகும்.

இவ்வாறு ஜீவன், ஜீவசாட்சி ஆகிய இரண்டின் வித்தியாசத்திற்கு அந்தக்கரணமான மனமே காரணமாகிறது. ஆகவே மனம் ஒழிந்தால், ஜீவன், ஜீவசாட்சி என்ற பேதம் ஒழியும். அதாவது ஜீவத்தன்மை ஒழிந்து ஜீவ சாட்சியான கூடஸ்தனே நிலையாய் ஒளிரும்.

'தத்வமஸி' என்ற மகா வாக்கியத்தில் தத் என்ற பதத்தின் வாச்சியார்த்தம் (Literal meaning) 'ஈஸ்வரன்' என்பதாகும். 'தொம்' என்ற பதத்தின் வாச்சியார்த்தம் 'ஜீவன்' என்பதாகும். ஜீவன், ஈஸ்வரன் என்பவை கற்பிதமானவை. இவற்றை நீக்கி இலட்சியார்த்தமான (Implied meaning) கூடஸ்தனை (தன் ஆன்மாவை), ஆதார வஸ்துவான பிரம்மமாகக் காண வேண்டும். அதுவே சுத்த சைதன்ய வஸ்துவாகும்.

தன் ஆன்ம ஸ்வரூபத்தை அவித்தை சம்பந்தப்பட்ட ஜீவனிலிருந்து வேறு பிரித்து அறிவது எங்ஙனம் எனின், பஞ்சபூதங்களின் சேர்க்கையால் உண்டான இந்த ஸ்தூல உடல் நீயல்ல; அதை நீக்கிவிடு.

நீ சுவாசிக்கும் பிராணவாயுவும் நீயல்ல;

இந்தப் பிராணன் சூட்சும பஞ்சபூதங்களின் இரஜோகுண கற்பனையால் உண்டானதென அதையும் நீக்கிவிடு.

அந்தக்கரணங்களில் மனோமய கோசமும், விஞ்ஞானமய கோசமும் சூட்சும பூதங்களின் சத்வகுணத்தில் உண்டானவை ஆகும்; ஆகையால் அவையும் நீயல்ல என்று ஒதுக்கிவிடு.

மீதமுள்ள ஆனந்தமய கோசம் அஞ்ஞானமாகிய தமோ குணமாகும்; ஆகையால் இதுவும் நீயல்ல என்று ஒதுக்கிவிடு.

இவ்வாறு சத்தாய், சித்தாய், ஆனந்தமயமாய், சமமாய் நிலையுள்ளதாய் அனைத்திற்கும் சாட்சியாய், ஏகமாய், நித்ய வஸ்துவாய், பரிபூரண வஸ்துவாய் விளங்கும் ஆன்ம ஸ்வரூபமே நீயாவாய் என்பதை அறிக.

இவ்வாறு பஞ்ச கோசங்களையும் நீக்கி அவற்றிற்கப்பால் காணும் போது அந்தகாரமான பாழ்வெளியே எஞ்சி நிற்கிறது என்பது சாதகர்களின் அனுபவமாகும்.

இச்சந்தேகத்திற்குக் கைவல்ய நவநீதம் விளக்கம் தருகிறது:

பிரகிருதியை நீக்கியபின் பாழ்வெளியை (அந்தகாரம்) காண்பவன் யார்?

அப்பாழ்வெளியை 'நான்' என்கிற ஸ்வரூபம் என்று ஏமாறாதே!

அந்தகாரத்தைக் காண்பவனே நீ; அதனைக் கண்ட ஞானமே நீ; அதுவே உன் ஸ்வரூபம் என்கிறது கைவல்ய நவநீதம்.

ஸ்தூல, சூட்சும, காரணமாகிய மூன்று சரீரங்களும், ஜாக்ரத், ஸ்வப்ன, சுழுப்தி என்ற மூன்று அவஸ்தைகளும், பூத, பவிஷ்யவர்த்தமான (past, present and future) என்ற மூன்று காலங்களும் பிறப்பாகிய கடலில் உண்டாகும் அலைகளைப் போலத் தோன்றித் தோன்றி அழிகின்றன. இவை அனைத்தையும் காணும் சாட்சி நீயே ஆவாய் என்கிறது கைவல்ய நவநீதம்.

சுயஞ்ஜோதியான உன்னையே நீ காண, வேறொரு பிரகாசம் இல்லை.

சுத்த சைதன்யத்திற்கு அன்னியமான ஞானம் இல்லை.

உனது ஆன்ம வஸ்துவான சைதன்யத்தை அனுபவத்தில் நீ உணர்ந்து கொள்க என்கிறது கைவல்ய நவநீதம்.

சூட்சமமாய் சாட்சியாய் உள்ள கூடஸ்தனே தான் என்ற அனுபவத்தைப் பெற்று, அதன்பின் அந்நிலையையும் விடுத்து, கூடஸ்தனே பிரம்மம் என்ற அகண்டாகார அனுபவத்தையும் நழுவ விட்டு சாதகன் பூரண பிரம்ம நிலையில் நிலைபெற வேண்டும் என்கிறது கைவல்ய நவநீதம்.

ஜீவன் ஈஸ்வரன் என்பவர்களில் பேதம் உண்டு.

ஜீவன் பிண்டத்தில் உள்ளான்; ஈஸ்வரன் அண்டத்திலும் உள்ளான்.

ஜீவன் காரிய உபாதி; ஈஸ்வரன் காரண உபாதி.

ஜீவன் வியஷ்டி தேகம் உடையவன்; ஈஸ்வரன் 'சமஷ்டி' தேகம் உடையவன்.

ஜீவன் அற்ப ஞானம் உடையவன்; ஈஸ்வரன் சர்வஞ்ஞன் ஆவான்.

இவர்களிடையே உள்ள பேதம் பாதாளமும், விண்ணும் போல அவ்வளவு விரிவானதாகும். ஆகையால் ஜீவ ஈஸ்வரர்களுக்குள் பெயராலும் இடத்தாலும் ஐக்யம் என்பது இல்லை. ஆயினும் இருக்கும் இயற்கையால் உபாதிகளை நீக்கி, இருப்புணர்வை நோக்கின் இருவரும் ஒரு பொருளேயாவார். இவ்விதமாய் பூரண நிலையை ஒருவன் எய்திய பின் இந்நிலையிலிருந்து அவன் நழுவுவதற்கும் வாய்ப்பு உண்டு என்கிறார் இந்நூலாசிரியரான ஸ்ரீமத் தாண்டவராய சுவாமிகள்.

ஒருவன் தன்மயமான பிரம்ம ஸ்வரூபத்தைக் குரு அருளினாலும், சாஸ்திர அறிவினாலும் பெறுவானாயினும் 'பிரதி பந்தங்கள்' என்ற தடைகள் இருக்குமானால் அவ்வான்ம அனுபவம் நிலைபெறாமல் போகவும் கூடும் என்கிறது கைவல்ய நவநீதம்.

ஞான நிலையை எய்திய ஒருவர் அந்நிலையிலிருந்தும் நழுவும் வாய்ப்பு உண்டா என பகவான் ஸ்ரீ ரமண மகர்ஷிகளை அடியார்கள் வினவியபோது, பகவான் கைவல்ய நவநீதத்தில் உள்ள, 'துட்டமாம் தடைகள் மூன்றும்' என்ற பாடலில் உள்ள கருத்தையே எடுத்துக்கூறி 'நழுவுதல் சாத்யமே' என்றார் (பாடல் 87).

பிரதி பந்தங்கள் என்று கூறப்படும் தடைகள் மூன்று.

அவை அஞ்ஞானம், சந்தேகம், விபரீதம் என்பன. இவை முற்பிறவிகளின் பழக்கத்தினால் அடிக்கடி வரக்கூடியவை. இவற்றால் உயர் ஞானமும் மறைக்கப்படும்.

இத்தடைகளை நீக்கும் வழி :

மூலப் பொருளான 'திருக்கு' நினைவை மறைத்துக் கற்பிதமான 'திரிசியத்தைக்' காண்பிப்பது அஞ்ஞானமாகும். இதை இடைவிடாத 'சிரவணத்தினால்' நீக்கவேண்டும்.

குரு உபதேசத்தில் திட நம்பிக்கையின்றி மனக்கலக்கமுறுதல் 'சந்தேகம்' ஆகும். இதை 'மனனத்தால்' நீக்க வேண்டும்.

நிலையற்ற இந்த ஜகம் சத்யமெனவும் சரீரமே 'நான்' எனவும் நினைக்கும் மயக்கமே 'விபரீதமாகும்'. 'சுவானுபூதித்' தெளிவினால் இந்த விபரீதத்தை நீக்க வேண்டும்.

குரு மூலமாகப் பெறும் பிரம்மோபதேசம் 'சிரவணம்' எனப்படும்.

அதன் ஐக்ய அர்த்தத்தைச் சிந்தித்தல் 'மனனம்' எனப்படுகிறது.

ஏகாந்தமாய் அனுபூதிநிலையில் நின்று தெளிதல் 'நிதித்தியாஸனம்' எனப்படுகிறது.

இவற்றை இடைவிடாது கடைப்பிடித்து வந்தால் பிரதிபந்தங்கள் நீங்கி, நிலையான முக்தியைப் பெறலாம்.

எவ்வளவு காலம் காண்பான், காட்சி என்ற பேதம் (த்வைத பாவம்) உளதோ, அவ்வளவு காலம் சிரவணம், மனனம், நிதித்யாஸனம், ஆகிய மூன்றும் தேவையாகும். அதன் பிறகு எந்தவிதமான சாதனையும் தேவையில்லை.

**ஜீவன் முக்தர்களின் வகைகளும் அவர்களின் இயல்புகளும் :**

ஜீவன் முக்தர்கள் பிரம்மவித்து, பிரம்மவித்வரன், பிரம்ம வித்வரியான், பிரம்மவித்வரிஷ்டன் என நான்கு வகைப்படுவர்.

'பிரம்ம வித்து' எனப்படுவோர் தாங்கள் முன்பிருந்த தங்கள் வர்ணாஸ்ரம தர்மத்தைச் சாஸ்திரங்களில் கூறிய விதம் அனுஷ்டித்து, அனைவருக்கும் அனுகூலமாய் வாழ்வார்கள்.

இவர்கள் தாமரை இலைமேல் தண்ணீரைப் போல எதிலும் ஒட்டாமல் உலகில் வாழ்வார்கள்.

தங்கள் ஞான நிலையை மறைத்துக் கொண்டு அஞ்ஞானி களைப் போலவே நடிப்பார்கள். இதயத்திலே எப்போதும் நித்யானந்தத்தை அனுபவிப்பவர்களாய் இருப்பார்கள்.

இவ்வித பிரம்ம வித்துக்கள் கடுந்தவம் செய்தாலும் செய்வார்கள்;

வியாபாரம் செய்தாலும் செய்வார்கள்;

நாடாள்பவர்களாகவும் இருப்பார்கள்; அல்லது பிக்ஷை யேற்றுத் திரிபவர்களாகவும் இருப்பார்கள்; இவர்கள் சென்றதை நினைத்து வருந்த மாட்டார்கள்;

இனிவரக் கூடிய நன்மைகளை நினைத்து மகிழ்ச்சி கொள்ள மாட்டார்கள்;

நிகழ்காலத்துச் சுகதுக்கங்களைப் பிராரப்தம் என்று ஏற்று அனுபவிப்பார்கள்.

சூரியனது வெப்பக் கிரணங்கள் அமிர்தக்கிரணங்களாகப் பொழிந்தாலும், இறந்தவன் உயிர் பெற்றெழுந்தாலும் அவற்றில் அதிசயம் எதையும் காணமாட்டார்கள்.

எதையும் நன்று தீது என்று கருத்துத் தெரிவிக்க மாட்டார்கள். பிரம்மவித்தான இவர்கள் அனைத்திற்கும் சாட்சி மாத்திரமாக இருப்பார்கள்.

மற்றைய மூவகை ஜீவன்முக்தர்கள் சமாதி நிலையை பொருந்தியவராவர். அவர்களில் 'பிரம்மவித்வரன்' என்ற ஜீவன் முக்தர்கள், தம் மனத்தை, உடல் ஜீவிப்பதற்கான அளவு மட்டுமே தாமே பிரவிர்த்திப்பர் (எண்ணங்களை எழ விட்டு உணவு நாடுவர்).

'பிரம்ம வித்வரியான்' என்ற ஜீவன் முக்தர்களோ சீடர்கள் போன்ற அன்னியர்களால் சமாதி நீங்கப் பெற்று எண்ணங்களை எழ விட்டும், உடல் ஜீவித்தற் பொருட்டு உணவை ஏற்று ஜீவிப்பவர்களாக இருப்பார்கள்.

'பிரம்ம வித்வரிஷ்டன்' என்ற வகையைச் சேர்ந்த ஜீவன் முக்தர்கள் எண்ணங்கள் எழப் பெறாதவர்களாகவும், பிறர் அளிக்கும் உணவை ஏற்றுப் புசியாமலும், அதாவது பகிர்முகப் படாதவர்களாய் எப்போதும் சமாதி நிலையில் இருப்பார்கள்.

ஜீவன் முக்தனின் மகிமை :

பஞ்ச பூதங்களில் ஆகாயம் மற்ற நான்கு பூதங்களுடன் கலந்திருப்பினும், அது எதிலும் ஒட்டாமல் இருப்பது போல, ஜீவன் முக்தன் கர்மங்களை இயற்றுவது போல

வெளித்தோற்றத்திற்குக் காணப்பட்டாலும் அவன் உள்ளத்தில் எவ்வித பற்றுதலுமின்றி இருப்பான்.

இவ்வித மகிமை பொருந்திய ஜீவன் முக்தர்களைத் தரிசித்துச் சேவிப்பவர்கள் ஜன்ம சாபல்யம் பெறுவார்கள் என வேதங்கள் கூறுகின்றன.

**ஜீவன் முக்தர்களும் மூவித கர்ம வினைகளும், மூன்று சரீரமும் :**

ஜீவன் முக்தர்கள் ஆகாமியம், சஞ்சிதம், பிராரப்தம் ஆகிய மூவித கர்மாக்களும் அழியப் பெற்றவர்கள்.

ஜீவன்முக்தர்களின் சஞ்சித கர்மா :

'சஞ்சித கர்மா' என்பது முற்பிறவிகளில் செய்து, பலனை அனுபவிக்காமல் எஞ்சி நிற்கும் கர்மாவாகும். பஞ்சுப் பொதியை ஊழித்தீ எரித்து சாம்பராக்குவது போல் ஞானியின் சஞ்சிதகர்மா அவனது ஞானாக்னியில் எரிந்து அழியும்.

'ஆகாமிய கர்மா' என்பது இப்பிறவியில் செய்து மறுபிறவிக்குக் காரணமாய் அமையும் கர்மாவாகும். நான், எனது என்ற பற்றுதலின்றி ஞானி வினையாற்றுவதால் ஆகாமிய வினைப் பயன் அவனை அணுக முடியாது.

'பிராரப்த கர்மா' என்பது முற்பிறவிகளில் செய்து இப்பிறவியில் அனுபவிக்கும் கர்மாவாகும். ஞானியானவனது தூல தேகம் பிராரப்த கர்மாவை மூன்று விதமாக அனுபவித்து அதைப் போக்கிக் கொள்ளும்.

பொறுமையுடன் 'நான்' 'எனது' என்பதின்றி பிராரப்தத்தை புசிக்கும் காலத்தில் செய்யப்பட்ட கர்மமானது ஆகாமியமாக மாறாமல் அழிவது எப்படி என்றால், அறிவிலிகள் ஜீவன் முக்தர்களை இகழ்ந்து பேசி அவர்களின் பாவ கர்ம பலனையெல்லாம் எடுத்துக் கொள்கின்றனர்.

நல்லோர்கள் ஜீவன்முக்தர்களைத் துதித்து வணங்கி அம்முக்தர்களின் புண்ணிய கர்ம பலனையெல்லாம் எடுத்துக் கொள்கின்றன.

இவ்வாறு ஜீவன்முக்தர்களின் கர்மா முழுவதும் நல்லதும் கெட்டதுமாக நசித்துப் போகிறது.

ஜீவன்முக்தர்களின் காரண சரீரம் பரஞானத்தால் அழிகின்றது.

ஸ்தூல தேகமும் குறித்த கால அளவில் (ஆயுளில்) அழிகின்ற போது, சூட்சும தேகமும் ஞானத்தில் மறைந்து (கரைந்து) விடுகின்றது. இவ்வாறு மூவித கர்மாவும் மூவித தேகமும் அழிய, ஞானி விதேக முக்தியடைகிறான்.

**முடிவுரை :**

கடம் உடைந்து போனால் கடத்தில் இருந்த ஆகாயம் மகா ஆகாயத்துடன் கலந்து ஒன்றாகி விடுகிறது.

உண்மையில் ஆகாயம் இருந்தபடியேதான் இருக்கிறது. நம் திருஷ்டிக்குத் தென்பட்ட பானை என்கிற தடைதான் நீங்குகிறது. அதைப் போல ஜீவன் முக்தர்களின் தேகம் என்ற உபாதை நீங்கியவுடன், அவர்கள் ஆதியும், அந்தமும், நடுவுமற்ற கைவல்ய பதத்தில் 'நாம் எப்பொழுதும் இருக்கிறோம்' என்பதை தொடர்ந்து உணர்கிறார்கள்.

ஆகாயம் எங்கும் நிறைந்திருந்தாலும், பூமியைத் தோண்டும் போது அக்குழியில் அப்போது தான் ஆகாயம் தோன்றுவது போலக் காணப்படுகிறது. அதைப்போல அனாதியாய் விளங்கும் பிரம்ம வஸ்துவானது ஞான சாஸ்திர விசாரத்தால் கிடைத்தது போலத் தோன்றினாலும் உண்மையில் நாம் முக்காலமும் அகண்ட ஸ்வரூபமான பிரம்மமாகவே இருக்கிறோம் என்று தெளிவு பெறுவதே ஞானமாகும். அதாவது புதிதாக ஞானம் என்ற ஒன்றை அடைவது என்பதில்லை.

கானலில் காணும் நீர் போலவும், கிளிஞ்சலில் காணும் வெள்ளி போலவும், மாயா ஜாலத்தில் காணும் நகரம் போலவும், ஆகாயத்தில் காணும் நீல நிறம் போலவும், கயிற்றில் காணும் பாம்பு போலவும், மலடியின் மகன் என்பது போலவும்,

முயலின் கொம்பு என்பது போலவும், பிரம்ம ஸ்வரூபத்தில் தோன்றும் இப்பிரபஞ்சமெல்லாம் கற்பிதமேயாகும்.

எனவே உனது உண்மை ஸ்வரூபத்தை எப்போதும் மறவாமல், உன்னை உணர்ந்தவனாக நீ இருப்பாயாக என்று வற்புறுத்திக் கூறுகிறார் இந்நூலாசிரியரான ஸ்ரீமத் தாண்டவராய சுவாமிகள்.



பாகம் - 2

## சந்தேகம் தெளிதற் படலம்

1. **வினா:** பிரம்மம் வேதவாக்கிற்கு எட்டாதது என்று கூறப்படுகிறதே, அது எவ்வாறு உண்மையாகும்?

   **விடை:** பிரம்ம வஸ்து நாம, ரூபம் போன்ற எந்தவிதமான இலட்சணங்களும் அற்றது; அது நிர்குணமானது; அதைப் பஞ்சேந்திரியங்களாலும், பஞ்சபூதங்களாலும் அறிய இயலாது. அதைப் பிரத்யட்சம் (perception), அனுமானம் (inference), உபமானம் (analogy) போன்ற பிரமாணங்களாலும் (criterion), அறிய முடியாது. ஆகையால் பிரம்மம் வேதவாக்கிற்கு எட்டாதது எனப்படுகிறது.

2. **வினா:** பிரம்மம் வேத முடிவான மகாவாக்கியத்திற்கு எட்டக்கூடியது என்றும் கூறப்படுகிறதே அது எவ்வாறு உண்மையாகும்?

   **விடை:** வாக்கிற்கு எட்டாத பிரம்ம வஸ்துவை மகா வாக்கிய விசாரத்தால் அறியலாம் என்று வேதங்கள் கூறுகின்றன; வேதங்கள் அசத்தியத்தைக் கூறா.

   தனது நாயகன் அல்லாதவர்களை இவன் அல்லன் இவன் அல்லன் என்று கூறிய நாயகி, தனது நாயகனைச் சுட்டிக் காட்டி கேட்டபோது நாணங்கொண்டு வாய் பேசாத வளானது போல, பிரம்ம வஸ்து இதுவன்று, இதுவன்று என்று நேதி செய்து தள்ளிய பின் முடிவில் நீக்கப்படாததாக எஞ்சி நிற்பது எதுவோ அதுவே பிரம்ம வஸ்து என்று வேதமானது சொல்லாது சொல்லுகிறது.

3. **வினா:** பிரம்மம் மனதிற்கு எட்டும்; பிரம்மத்தை மனதால் அறியலாம் என்று கூறுவது எப்படிச் சரியாகும்?

   **விடை:** கண்ணாடிக்குள் பிரதிபிம்பம் காண்பதுபோல சித்தின் சாயையாக புத்தி தோன்றுகிறது. புத்தியின் கவனம்

ஒரு பொருளை நோக்கிப்பாயும்போது விருத்தியெனப் படுகிறது. அப்படிப் பாய்ந்த விருத்தியில் சித்தின் ஆபாசம் பாய்ந்து பொருளின் அனுபவம் சிதாபாசனான ''நான்'' என்னும் ஜீவனுக்கு உண்டாகிறது. இதுவே ''பலம்'' (Phalam) அல்லது ''பலஞானம்'' (Phalajnana) எனப்படும். இருளில் உள்ள பொருளைக்காண கண்பார்வையும் விளக்கொளியும் தேவை. இதைப்போல உலகத்தைக்காண ஜடசம்பந்தமான விருத்தியும் பலஞானமும் தேவை. இப்படியாக அறியும் திறன் மனதிற்கு இருப்பதனால், பிரம்மம் மனதிற்கு எட்டும். பிரம்மத்தை அதாவது சித்தாகிய பொருளை மனத்தால் அறியலாம் என்று கூறப்படுகிறது.

4. **வினா:** பிரம்மம் மனதிற்கு எட்டாது என்பது எப்படிச் சரியாகும்?

   **விடை:** இருளில் உள்ள பொருளைக் காண கண்பார்வையும் விளக்கொளியும் தேவை. ஆனால் விளக்கொளியைக் காண கண் அதை நோக்கினால் போதும். வேறு ஒளி தேவையில்லை. இதைப்போல உலகத்தைக் காண ஜடசம்பந்தமான விருத்தியும் பலஞானமும் தேவை. ஜீவனாகத் தோன்றும் தன்னையே காண (அறிய) உள்முகப்பட்ட விருத்தியொன்றே போதும். விஷயத்தை மட்டும் அறியவல்ல பலரூபமான (reflected consciousness) மனதினால், பிரம்மத்தை விஷயமாக அறிய இயலாது. ஆகையால் பிரம்மம் மனதிற்கு எட்டாது என்று கூறப்படுகிறது. அகமுகப்பட்ட மனதினால் பிரம்மத்தை அறியமுடியும். பகிர்முகப்பட்ட மனதிற்கு பிரம்மம் எட்டாது. (பாடல் 115)

5. **வினா:** மனம் பூரண ஸ்வரூபத்தில் கலந்து போனதால்தான் சமாதி கைகூடும் என்று கூறப்படுகிறது. அவ்வாறிருக்க சஞ்சலமான மனம் பிரம்மத்தில் நிலைபெறுவது எப்படி முடியும்?

விடை: மனம் சத்துவம், இராஜஸம், தாமஸம் என்ற மூன்று தன்மைகளை உடையது.

உயர்ந்த சத்வ குணமானது மிகுந்து நிற்கும் போது சன்மார்க்கமும் தெய்வசம்பத்தும் உண்டாகும். அப்போது மனம் சித்தத்தில் அசையாது நிற்கும். சத்துவமனம் தன்ஸ்வரூபத்தில் நிலைத்து விட்டால் ரஜோ குணமும் தமோ குணமும் நசித்துப் போகும். இவ்விதம் மனம் அழிய நிர்விகல்ப சமாதி கைகூடும்.

6. வினா: ஜீவன்முக்தர்கள் மனம் அழிந்தபின் பிராரப்த கர்மாவை எப்படி அனுபவிக்க முடியும்? பிராரப்த கர்மாவை அனுபவிக்க மனம் செயல்பட வேண்டுமானால் அவர்களை ஜீவன்முக்தர்கள் என்று எப்படிக் கூற முடியும்?

விடை: மனோ நாசம் இருவகைப்பட்டது. அவை 'உருவ நாசம்' 'அருவ நாசம்' என்பன. தமோ குணமும் ரஜோ குணமும் நசித்து சத்வ குணம் மட்டும் மிஞ்சி நிற்கும் நிலையில் ஜீவன்முக்தர்களுடைய மனம் உருவ நாசமானதாகும்.

பிறகு சத்வகுணமும், சூட்சும சரீரம் நசிக்கும்போது மறைவதனால், அருவநாசம் ஏற்பட்டு, விதேக முக்தி சம்பவிக்கும். சுத்த சத்வமே மனதின் உண்மை ஸ்வரூபமாகும். தமோ ரஜோ குணங்கள், சலனமும் அஞ்ஞானமும் பொருந்தியவை. அவை அழிந்தால் மாயையாகிய மனம் அழிந்து ஒழிந்து போகும்.

7. வினா: ஜீவன்முக்தன் உலக விஷயங்களில் ஈடுபட்டாலும், எல்லாவற்றையும் அனுபவித்தாலும் அவற்றில் ஒட்டாதவனாக இருப்பான் என்றால் அவன் சமாதி நிலையில் எப்படி இருக்க முடியும்? ஜீவன்முக்தன் போகங்களைப் புசிப்பது எங்ஙனம்? அவன் ஒரு தொழிலைச் செய்யும் கர்த்தாவாக எப்படி இருக்க முடியும்? அவனுக்கு பிராரப்த போகம் எப்படி இருக்க முடியும்?

**விடை:** ஜீவன்முக்தர்கள் மா-கர்த்தன், மா-போகி, மா-தியாகி என்று மூன்று விதமான இலட்சணங்களைக் கொண்டவர்களாக இருப்பார்கள்.

ஜட உலகமெல்லாம் தன் ஆன்மஸ்வரூபத்தின் சக்தியால் இயக்கப்படுகின்றன; ஆனால் தான் அவற்றால் பாதிக்கப்படவில்லை என்ற திட அனுபவமுடன் எதனுடனும் சம்பந்தப்படாது சூரியனைப் போல அனைத்திற்கும் சாட்சி மாத்திரமாக இருப்பான். 'மா-கர்த்தன்' ஆவான்.

உணவில் நல்லது, கெட்டது, சுத்தம், அசுத்தம் என்று வித்தியாசம் பார்க்காமல் தனக்குக் கிடைத்த உணவை விருப்போ, வெறுப்போ இன்றி காட்டுத்தீபோல் ஏற்று உண்பவன் 'மா-போகி'யாவான்.

தன்னுடையது, பிறருடையது என்ற எவ்வித பேதமுமின்றி, நன்மை, தீமை எது வரினும் அதனால் பாதிக்கப்படாத வனாக பளிங்குபோல் இருப்பவன் 'மா-தியாகி' ஆவான்.

8. **வினா:** பிராரப்த விதிப்படியான கர்மங்களைச் செய்து கொண்டிருக்கும் ஞானியைக் 'கிருதக் கிருத்யன்' அதாவது அவன் ஆற்றவேண்டிய கடமைகள் அனைத்தையும் ஆற்றி முடித்தவன் என்று கூறுவது எப்படிப் பொருந்தும்? (பாடல் 127)

**விடை:** அஞ்ஞான நிலையில் உள்ளவர்கள் மூன்று விதமான பலனைக் கருதி ஆணவத்துடன் தொழில்களைச் செய்கின்றனர். இகலோக சுகங்களைப் பெற பலவித உலகத் தொழில்கள் செய்பவர்கள்; பரலோக சுகங்களுக்காகத் தரும காரியங்கள், யாகம் முதலிய வற்றைச் செய்பவர்கள்; ஞானமடைய விரும்பி சாஸ்திர ஆராய்ச்சி, சிரவணம், மனனம் முதலிய கிரியைகளைச் செய்பவர்கள் என மக்கள் மூன்று விதமாகக் கர்மங்களை இயற்றுகின்றனர்.

ஆனால் பிரம்ம நிலையை எய்திய ஞானிகளுக்கு இம்மூன்று வகையான காரியங்களால் பயனேதும் இல்லை.

அவர்களுக்கு ஆற்ற வேண்டிய கடமை ஏதும் இல்லை. எனவே அவர்கள் கிருத கிருத்யர் எனப்படுகின்றனர்.

9. **வினா:** ஞானி இகபர சுகங்களை விரும்பி உலக விஷயங்களில் ஈடுபடாதவன் எனினும் ஞானம் ஸ்திரப்பட அவன் சிரவணாதி காரியங்களைச் செய்ய வேண்டு மல்லவா? அவ்விதமாயின் ஞானி தொழில் புரியாதவன் என்று எப்படிக் கூற முடியும்?

**விடை:** மோட்ச இச்சையுள்ள சாதகர்கள் ஞானம் பெறுவதற்கு அஞ்ஞானம், சந்தேகம், விபரீதம் போன்ற தடைகளை நீக்கிக் கொள்ள சிரவணம், மனனம், நிதித்யாஸனம் ஆகியவற்றைச் செய்ய வேண்டும்.

ஆனால் பிரம்ம சாட்சாத்காரமடைந்து ஆரூட (அதாவது சகஜ) நிலையில் உள்ள ஞானிக்கு ஆற்றவேண்டிய கர்மம் ஒன்றும் இல்லை.

10. **வினா:** ஜீவன் முக்தர்கள் அஞ்ஞானிகளைப் போல இதைச் செய்கிறேன், இதைப் பார்க்கிறேன், இதைச்சாப்பிடுகிறேன் என்றெல்லாம் சொல்லலாமா? இவர்களுக்குப் பேத பாவனை நீங்கி இருக்க வேண்டுமே? இவர்கள் இப்படிக் கூறினால் அஞ்ஞானிகளுக்கு உள்ள ஜீவ பாவம் இவர்களுக்கு இல்லை என்று எப்படிக் கருதுவது?

**விடை:** கனவில் கண்ட நிகழ்ச்சியை ஒருவன் விழிப்பு நிலையில் கூறுவது போல, தன்னையறிந்த ஜீவன் முக்தன், பூர்வ அஞ்ஞான வாசனையால் இதைச் செய்தேன், அதைச் செய்தேன் என்றெல்லாம் கூறினாலும் அவன் 'சிதாபாசன்' ஆகமாட்டான் (ஜீவத்துவம் அடையமாட்டான்). களங்கப்பட மாட்டான். பிராரப்தத்தால் வந்த உடல் அழியும் வரையிலும் அவன் பிறர் பார்வைக்குச் சிதாபாசனாகக் காணப்படுவான், அவ்வளவு தான்.

பகவான் ஸ்ரீ ரமண மகர்ஷிகளின் வாழ்க்கையில் நிகழ்ந்த ஒரு சம்பவமே இந்நிலைக்கு எடுத்துக் காட்டாகும்.

ஒரு சமயம் எல்லோரும் (பகவானுட்பட) பார்த்த ஒரு போட்டோ, சிறிது நேரத்திற்குப்பின் தேடியபோது காணவில்லை. பகவான் முன்னிலையில் மற்றவர்கள் தேடி, அதன் மறைவைப்பற்றி ஆச்சரியப்பட்டுக் கொண்டு இருந்தனர். பகவான் சாட்சி பூதமாக இருந்ததைக் கவனித்துக் கொண்டிருந்த ஃப்ரீட்மான் என்ற ஐரோப்பிய அன்பர்: ''பகவான்! நீங்களும் அந்த போட்டோவை பார்த்தீர் அல்லவா? இப்போது அதன் மறைவைப் பற்றி ஆச்சரியப்படவில்லையா?''

பகவான்: ''உங்கள் நாடான போலந்துக்கு நீர் என்னையும் அழைத்துச் செல்வதாகக் கனவு காண்கிறீரென்று வைத்துக் கொள்ளும். கனவு கலைந்து எழுந்த பின் நீர் என்னிடம் வந்து நானும் அப்படியே கனவு கண்டேனா என்று என்னைக் கேட்டால் நான் என்ன சொல்வது?''

ஃப்ரீட்மான்: ''அப்படியானால் நாம் அனைவரும் போட்டோவைப் பார்த்ததும், பின் அதைத் தேடுவ தெல்லாம் என் திருஷ்டிக்குத் தோன்றும் காட்சியேயாகும் என்றாகிறது அல்லவா?''

பகவான்: ''உமது இந்தக் கேள்வி உட்பட எல்லாம் மனோ மயமே...''

அதாவது பகவான் ''இதைச் செய்கிறார், அதை நோக்கினார்'' என்று மற்றவர்கள் கூறுவதெல்லாம், பிறர் பார்வைக்கு சிதாபாசனாக அவர் தோன்றுவதனாலேயே. பகவானைப் பொருத்தவரை கர்த்தாவைக் காணோம்!

11. **வினா:** ஞானி உலக விஷயங்களில் ஈடுபட்டால் அதனால் துன்பம் தானே விளையும்? உலக வியவகாரங்கள் அற்றால் தானே, நிர்விகல்ப சமாதியும் பிரம்மானந்தமும் ஏற்படும்? தவிரவும் நிஷ்டை புரிவதே ஒரு கர்மம் ஆயிற்றே! இவை ஒன்றுக் கொன்று முரணாக உள்ளனவே! இவை எவ்வாறு உண்மையாகும்?

**விடை:** பிராரப்த கர்மம் தீரும் வரையிலும் ஞானிக்கும் வியவகாரம் இருக்கத்தான் செய்யும். சமாதி பழகுவது

அந்தக்கரண செயலேயாகும்; சாட்சாத்காரம் எய்தியவர்கள் ஆற்ற வேண்டிய கர்மம் ஒன்றும் இல்லை. அப்படிச் சமாதி பழகுபவராயின் அவர் ஆரூட நிலையில் உள்ளவராக மாட்டார்.

மேலும் ஞானிகள் செய்யும் கர்மம் உலக நன்மைக்கே யாகும். அவர்கள் ஆற்றும் வினையினால் அவர்கள் துன்பம் அடைவதில்லை. உலகைப் படைத்துக் காத்து, தர்மாதர்மத்தை யாவருக்கும் அருளி வருகின்ற ஈசன் தனது கர்மங்களால் பாதிக்கப் படாதது போல ஞானியும் கர்மங்களால் பாதிக்கப்படுவதில்லை.

எனவே ஆரூட நிலையில் உள்ளவன் ஆற்றும் தொழில் ஈசனைப் போல உலக நன்மைக்கேயன்றி, அதனால் அவன் அடையும் பயன் ஒன்றுமில்லை.

12. **வினா:** ஞானிகள் ஈசனுக்குச் சமமாவார்கள் என்பது எப்படி?

**விடை:** ஈஸ்வரனும் ஞானியும் அகந்தை, மமதை ஆகியவை நீங்கியவர்களாதலால் அவர்கள் சமமானவர்களே ஆவார்கள். ஞானி மும்மூர்த்தியுமாவான்; சகல ஜீவர்களும், ஜகத்தும் ஆவான்.

13. **வினா:** ஞானி சகல ஜீவர்களுமாவான் என்றால் ஞானி மோட்சமடைய சகல ஜீவர்களும் மோட்சமடையாதது ஏன்? ஜீவர்களெல்லாம் தனித்தனி வியக்தியாகையினாலே, ஞானி அனைத்துமாவது எப்படி?

**விடை:** அனைவரது உள்ளத்திலும் உறையும் ஆன்மா பூரண, ஏக வஸ்துவெனினும் மனவுபாதிகள் அநேக மானவை; ஆதலால் அது பலவிதமானதாக விளங்கும்.

உலகிற்கு குளிர்ச்சியைத் தருகின்ற சந்திரன் ஒன்று; ஆனால் உலகில் உள்ள ஏரிகள், குளங்கள், பள்ளங்கள், பானைகளில் உள்ள நீரில் எல்லாம் அந்தச் சந்திரன் பிரதிபலிக்கின்றான். இவ்வாறு பிரதிபலிக்கும் சந்திரர்களும் பலப்பலவாம்.

இப்படிச் சந்திரன் பிரதிபலிக்கும் பானைகளில் ஒன்று உடைந்தால் அதில் பிரதிபலித்த சந்திரன் மட்டும் 'மூல'

சந்திரனுடன் சேர்ந்து விடுகின்றது. ஆனால் மற்ற பிரதிபலிக்கும் சந்திரர்கள் ஏகமாவது இல்லை.

இவ்வாறே பந்தத்திலிருந்தும், அறியாமையிலிருந்தும் விடுபட்ட ஜீவன் தனக்கு ஆதாரமான பிரம்மத்துடன் ஐக்கியப்பட்டு விடுகிறது. ஆனால் அவித்தை நீங்காத பிற ஜீவன்கள் எல்லாம் மோட்சமடைவது இல்லை.

14. **வினா:** பிரம்மா, விஷ்ணு, ருத்ரன் ஆகிய மும்மூர்த்திகளும் உலகத்தைப் படைத்தலும், காத்தலும், அழித்தலும் செய்கிறார்கள். முக்காலங்களையும் அறிந்தவர்களாய் எங்கும் நிறைந்து விளங்குகிறார்கள். ஆனால் ஞானியிடம் இவ்வல்லமைகள் இல்லையே! அவன் எப்படி ஈஸ்வரனுக்குச் சமமாவான்?

**விடை:** ஏரியில் உள்ள நீர் ஊரையும், பானையில் உள்ள நீர் வீட்டையும் காக்கின்றன. இவை பெரிது, சிறிது எனினும் இவற்றின் 'காக்கும் சக்தியில்' பேதமில்லை என்பதை அறிக. (பாடல் 142)

மனிதர்களில் சித்தர்களுக்குள்ள மகிமை மற்ற சாதாரண மனிதர்களுக்கு இல்லை; எனினும் 'மானுடத்தன்மை'யில் இவர்கள் ஒப்பாவது போல, திரிமூர்த்திகளும் ஜீவன்முக்தர்களும் 'தேவத்தன்மை', 'மானுடத்தன்மை' என்ற வேற்றுமையுள்ளவர்களாயினும் 'சித்துத்தன்மையில்' (சுத்தஅறிவில்) இவர்கள் ஒப்பாவார்கள்.

15. **வினா:** அஷ்டமாசித்திகள் ஈஸ்வரனது சக்திகளல்லவா? பண்டைய ரிஷிகள் இச்சக்தியைப் பெற்றவர்களாக இருந்திருக்கிறார்களே, அது எங்ஙனம்?

**விடை:** ஈஸ்வரனை வேண்டிச் செய்யும் தவத்தாலும், யோக சாதனைகளாலும், மனிதன் சித்தி, முக்தி ஆகிய இரண்டையும் பெற முடியும்.

16. **வினா:** ஞானிகள் தவத்தினால் சித்தி, முக்தி இரண்டையும் பெற முடியுமானால், இக்காலத்தில் ஞானிகளிடம் அப்படிப்பட்ட அஷ்டமாசித்திகள் இல்லையே, ஏன்?

விடை: தவம் 'காமியத்தவம்', 'நிஷ்காமியத்தவம்' என இருவகைப்படும்.

காமியத்தவத்தால் அஷ்டமா சித்திகளைப் பெறலாம். நிஷ்காமியத்தவம் மோக்ஷத்தை மட்டும் தரும். முற்காலத்தில் முனிவர்கள் இவ்விரு தவங்களையும் செய்து சித்தி, முக்தி ஆகிய இரண்டையும் பெற்றனர். சித்திகளை மட்டும் விரும்பித் தவம் இயற்றியவர்களும் உண்டு.

இவ்வாறு முனிவர்கள் அடையும் சித்திகள், சித்து விளையாட்டுகளாகுமே தவிர, அவை முக்தியைத் தரமாட்டா.

17. வினா: மோட்சத்தைத் தராத அஷ்டமா சித்திகளைப் பெற விரும்பிச் சில ஜீவன்முக்தர்கள் உடலை வருத்திக்கொள் கிறார்களே, ஏன்?

விடை: ஜீவன்முக்தர்களில் சிலர் பெற்ற சித்துச்சக்திகள் அவர்களது பிராரப்த கர்மமே யாகும். இவற்றையும் அனுபவித்து அவர்கள் பிராரப்தகர்மத்தைப் போக்கிக் கொள்வார்கள்.

18. வினா: ஒருவன் தான் செய்த கர்மத்தை அனுபவித்தே தீர்த்துக் கொள்ள வேண்டும் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. அதே சமயம், ஒருவன் பல ஜன்மங்களில் செய்த சஞ்சித கர்மாவை, அவனது சுத்த ஞானமான அக்னி சுட்டெரித்துவிடும் என்றும் சாஸ்திரங்கள் கூறுகின்றனவே, இவற்றில் எது உண்மை?

விடை: ஜீவர்களிடையே உள்ள அந்தக்கரண வித்தியாசங்கள் அளவற்றவை. அவர்களின் செயல்களிலும் வித்தியாசங்கள் அதிகம். ஆகையால் ஜீவர்களிடையே 'அதிகார பேதங்கள்' (Differences in fitness) உள்ளன. புஷ்பங்கள் முதலில் மொட்டாக இருந்து பின்னர் மலர்ந்து பலன் அளிப்பது போல ஜீவர்களின் அதிகார பேதங் களுக்குத் தக்கபடி கர்மகாண்டம், உபாசனா காண்டம், ஞானகாண்டம் என்று மூன்று வித காண்டங்களிலே 'பூர்வபட்சம்', 'சித்தாந்தம்' ஆகிய இரண்டையும் வேதங்கள் விளக்குகின்றன.

பெரும் பாவங்களைச் செய்தவர்கள்கூட விரதம், யாகம், மந்திரங்கள், தானதருமங்கள் ஆகிய பிராயச்சித்தங்களால் பாவங்களைப் போக்கிக் கொள்ளலாமென்று அவை கூறுகின்றன. சாஸ்திரங்கள் பொய்யாகா என்பதை அறிக. இதைப் போன்றே பல ஜன்மங்களைத் தரக்கூடிய சஞ்சித கர்மாக்கள் எவ்வளவு அதிகமானாலும் அவற்றை ஞானாக்னி சுட்டெரித்துவிடும் என்பது வேதவாக்கு.

ஒருவன் தான் செய்த கர்மங்களை அனுபவித்தே நீக்கிக் கொள்ள வேண்டுமென்றும் பிராயச்சித்தத்தால் பாவங்களை நீக்கிக் கொள்ள முடியுமென்றும் 'கர்ம காண்டம்'கூறுகிறது.

சஞ்சித கர்மாக்களை ஒருவன் ஞானாக்னியால் எரித்துப் போக்கிக் கொள்ள முடியுமென்று 'ஞான காண்டம்' கூறுகிறது.

எனவே, வேதங்கள் பலதிறப்பட்ட அதிகாரிகளுக்கும், அவரவர்களின் 'அறிவிற்கும்', 'தகுதிக்கும்' ஏற்ப அனைவரும் கடைத்தேறும் வழியைக் கூறுகின்றன என்பதை நாம் புரிந்து கொள்ள வேண்டும்.

19. **வினா:** மோட்சத்தைத் தரக்கூடிய மெய்ஞான மகிமையை உணராமல், பல நூல்களைக் கற்ற அறிஞர்களும், தேவர்களும் 'கர்ம மார்க்கம்' என்ற படுகுழியில் விழக் காரணமென்ன?

**விடை:** அழிவற்ற பிரம்ம பதத்தை 'உள்முக நாட்டம்' (Inward turned mind) உள்ளவர்களே பெற முடியும். பகிர்முக நாட்டம் (utward turned mind) கொண்டு விஷய சுகத்தை விரும்பும் காமிகள் பிறவிக் கடலில் சிக்கிச் சுழல்வார்கள்.

வழி நடப்பவர்கள் நல்ல கண்பார்வை பெற்றிருந்தும் கவனமின்றிக் குழியில் விழுவது போல பகிர்முக நாட்டமுள்ள காமிகள் பிறவிக் கடலில் விழுவார்கள்; அவர்கள் முக்திபெற இயலாது.

20. **வினா:** ஜீவர்களின் நல்வினை, தீவினை ஆகியவற்றைச் செய்விக்கும் காரண கர்த்தா ஈஸ்வரனேயல்லவா?

சுதந்தரமற்ற ஜீவர்கள் என்ன செய்வார்கள்; பிறவித் துன்பத்தில் சிக்கித் துன்புற அவர்கள் என்ன குற்றம் செய்தார்கள்?

விடை: ஈஸ்வர சிருஷ்டியும், ஜீவ சிருஷ்டியும் வெவ்வேறானவை. ஈஸ்வர சிருஷ்டிகள், ஜீவர்கள் மோட்சமடைய உதவும் சாதனங்களாகும்.

ஆனால் ஜீவ சிருஷ்டியான 'நான்', 'எனது' என்ற அகங்கார மமகாரங்கள், ஆசைகள், துவேஷங்கள் – ஆகியவையெல்லாம் பிறவியையளிக்கும் பந்தங்களாகும்.

ஜீவன் எவ்வழியில் முயற்சி செய்கிறானோ, அதற்குத் தகுந்த பலனை அடைகிறான். ஆகையால் ஈஸ்வரன் பட்சபாதமில்லாதவன் என்பதை அறிக. மேலும், பிரளய காலத்தில் ஈஸ்வர சிருஷ்டியான சகலமும் அழிகிறது. ஆனால் யாருக்கும் பிறவி ஒழிவதில்லை.

முண்டக உபநிஷத்தில் கூறப்பட்டுள்ள ஒரு கதை இங்கு மேற்கோளாகக் கூறப்படுகிறது.

அஸ்வத்த (அரச) மரத்தில் இரு பறவைகள் வசிக்கின்றன. அவற்றில் ஒன்று மிக்க ஆசையுடன் அம்மரத்தின் பழங்களை மிகவும் சுவையாக உள்ளனவென்று தின்ன, மற்ற பறவையோ எனின் அப்பழங்களைத் தின்னாமல் இருக்கிறது. கனிகள் உண்பது விஷய சுகத்தைப் புசிக்கும் ஜீவனாகிய பறவையாகும். கனிகளைப் புசியாத பறவை ஈசன் எனவும் கொள்க.

எனவே பிறவித் துன்பத்தை வருவித்துக் கொள்வது ஜீவச் செயலேயன்றி ஈஸ்வரச்செயல் அல்ல என்பதை அறிக. இவ்வுடல் அழியாதிருக்கும் போதே ஜீவர்கள் ஆசா பாசங்களை விவேகத்தால் ஒழித்து முக்திபெற வேண்டும்.

21. வினா: ஈஸ்வரன் அனைவருக்கும் பொதுவானவர். அவர் ஜீவர்களில் சிலரை சுகமாக வாழவும், சிலரைத் துன்பப்படச் செய்வதும் ஏன்?

**விடை:** தந்தை தனது பிள்ளைகளில் நல்வழியில் நடப்பவர்களைப் பாராட்டவும், தீயவழியில் செல்ப வர்களைக் கடிந்து கொள்வதையும் போல ஈஸ்வரன் நற்குணமுடைய ஜீவர்களுக்கு இன்பத்தையும், தீயகுண முடைய ஜீவர்களுக்குத் துன்பத்தையும் கொடுக்கிறான்.

உண்மையில் ஈஸ்வரன் ஜீவர்களுக்குத் துன்பத்தைத் தருவதும், அவர்களைத் தண்டித்துத் திருத்துவதும் அவனது பெருங்கருணையாலன்றிப் பட்சபாதத்தால் அல்ல என்பதை அறிக.

மேலும், கற்பகமரம் தன்னையடைந்தவர்களின் வறுமையைப் போக்குகிறது; நெருப்பு தன்னை யடைந்தவர்களின் குளிரைப் போக்குகிறது. நீரானது தன்னையடைந்தவர்களின் தாகத்தைத் தணிக்கிறது.

இவற்றைப் போலவே ஈஸ்வரன் தன்னையண்டினவர் களுக்குக் கிருபை புரிகிறான்; தன்னையண்டாதவர்களுக்குக் கருணை புரிவதில்லை. இது யாருடைய குற்றம்?

மோட்ச ஆசையுள்ளவர்கள் வேதவழி நின்று, சத்சங்கத்தை நாடி, காமக் குரோதாதி குணங்களைப் போக்கிக் கொள்ள வேண்டும். சமதமாதி சாதனைகளைப் பழகி, நித்ய-அநித்ய வஸ்து விவேகம் பெற்று மாயையிலிருந்து விடுபட வேண்டும். இவ்வாறு ஞான நிலையை எய்தியவர்கள் பிறவிக் கடலைக் கடந்து முக்தியைப் பெறுவது நிச்சயமாகும்.

22. **வினா:** அஞ்ஞானம் நீங்கி ஞானம் பெறுவது எங்ஙனம்?

**விடை:** இடைவிடாத ஆத்ம விசாரத்தால் ஞானம் பெறலாம்.

23. **வினா:** ஆதம் விசாரம் என்பது என்ன?

**விடை:** இவ்வுடலில் 'நான்' என்று இருக்கும் வஸ்து எது? 'சித்'தாக உள்ளது எது? ஜடம் என்பது எது? இந்த சித்தும் ஜடமும் ஒன்றாய் பொருந்திய 'பந்தம்' என்பது என்ன?

'மோட்சம்' என்பது என்ன வென்று இடைவிடாது விசாரித்து அறிவதே ஆத்ம விசாரமாகும். (பாடல் 164)

24. **வினா:** ஒருவன் பல பிறவிகளில் செய்த நற்செயல்களால் ஞானம் கைகூடலாமல்லவா? அங்ஙனமாயின் இப்போது 'விசாரம்' செய்ய வேண்டிய அவசியம் என்ன?

**விடை:** நாம் செய்யும் நற்செயல்களைப் பலன் கருதாமல் ஈஸ்வரார்ப்பணமாகச் செய்தால் சித்தசுத்தி ஏற்படும். சித்த மலம் நீங்கப் பெற்ற சுத்த மனதால் ஆத்ம விசாரம் செய்து ஞானம் பெறலாம்.

நிஷ்காமிய கர்மம் சித்த சுத்தியைத் தருமே தவிர விசாரத்தைப் போல அது நேராக ஞானத்தைத் தரக் கூடியதல்ல. (பாடல் 165)

25. **வினா:** சக்தி வாய்ந்த நற்கருமங்கள் (பக்தி, வைராக்கியம், சுவர்க்கம், அணிமா சித்திகள் ஆகிய பலவற்றையும் கொடுக்கும்போது) அஞ்ஞானத்தைப் போக்கக் கூடிய அறிவையும் அவை கொடுக்க முடியாதா? (பாடல் 166)

**விடை:** மாறு வேடம் பூண்டவர்களையறிய வேண்டுமானால் மறைந்திருக்கும் அவர்களது குணம், நடையுடை பாவனை முதலிய அடையாளங்களை ஆராய்ந்து அறிந்து அவர்களைக் கண்டு பிடிக்க வேண்டுமேயன்றி ஓடியும் குதித்தும், தலை கீழாக நின்றும், உயரமான கம்பத்தின் மீது ஏறி ஆடியும் செய்யும் அகட விகட சாமர்த்தியத்தால் அவர்களது உண்மை வடிவை அறிய முடியாது.

அதைப்போல பிரம்ம ஞானத்தை விசாரணையினால் பெற முடியுமேயன்றி, வேத சாஸ்திரங்களைக் கற்பதாலும், தான தருமங்களைச் செய்வதாலும் யாகங்களை இயற்றுவதாலும் ஆசார நியமங்களை அனுஷ்டிப்பதாலும் அறிய முடியாது. அதாவது கருமங்களை இயற்றுவதால் ஆத்ம ஞானம் சித்திக்காது.

26. **வினா:** கண்ணாடியில் உள்ள அழுக்கைக் கைகளால் துடைத்து நீக்குகிறோம்; அந்த அழுக்கைப் புத்தியால் நீக்குவது என்பது உண்டா? அதைப் போலக் களங்கமான அஞ்ஞானத்தை நற்செயல்களால் நீக்காமல் ஞானத்தால் எப்படி நீக்க முடியும்?

**விடை:** கண்ணாடியின் அழுக்கு உண்மையான அழுக்கு; அதைப் போக்கக் கைகளால் தேய்க்க வேண்டும். ஆனால் ஸ்படிகக் கல்லில் (crystal) தெரியும் அழுக்கு உண்மை யானதல்ல; அது கற்பிதமானது; ஆரோபமானது; அவ் வழுக்கு பொய்யானது என அறிய 'மனம்' மட்டுமே போதுமானதாகும்.

சத் சித் ஆனந்தமயமான ஸ்வரூபத்தில் தோன்றியிருக்கும் பிரபஞ்சங்களெல்லாம் ஜடமானவை; மாயையில் தோன்றியவை;

தவிரவும் ஒருவர் செய்யும் கருமங்கள் அஞ்ஞானத்தை அழிப்பதற்குப் பதிலாக அவற்றைத் தமக்கு உறவாக்கிக் கொண்டு அவனை ஏமாற்றி விடும். (அதாவது அவன் தான் செய்யும் கருமங்களிலேயே திருப்தியடைந்து அதோடு நின்று விடுவான்)

தூய ஞானமே கர்மத்தையும் அஞ்ஞானத்தையும் அழிக்கவல்லது.

27. **வினா:** ஞானத்தினால் தான் ஒருவன் மோட்சமடைய முடியும் என்று 'வேதங்கள்' கூறுகின்றன. அவ்வேதங்களே 'கர்மகாண்டத்தில்', ஒருவன் வர்ணாஸ்ரம ஒழுக்கங்களில் தவறாமல் வாழ்வதே தவம் என்றும், அதனால் அவன் சுகம் பெறுவான் என்றும் கூறுகின்றனவே, அதன் நோக்கமென்ன?

**விடை:** மண்ணைத் தின்று நோயுற்றிருக்கும் குழந்தையைக் குணப்படுத்த விரும்பும் தாய், குழந்தை கசப்பான மருந்தை உட்கொள்ளாதென்பதால், அம்மருந்தை இனிப்புப் பண்டத்தில் மறைத்து வைத்து அதைக் குழந்தைக்கு ஊட்டுகிறாள்.

அந்தக் கருணையுள்ள தாயைப் போல வேதமானது இல்லற தருமங்களைச் செய், யாகங்களைச் செய் என்று கூறுகிறதே தவிர, உண்மையில் அதன் கருத்து அதுவல்ல. சுவர்க்க போகங்களை அனுபவிக்க விரும்பும் ஆசையுள்ள வர்களுக்கு இந்த உண்மை விளங்காது.

28. **வினா:** ஞானத்தினாலேயே சுகம் என்று வேதம் கூறியது என்று கூறும்பொழுது ஜீவர்கள் போகத்தின் மூலம் சுகத்தைப் பெறவேண்டும் என்ற கருத்துடனேயே வேதம் போகங்களை அனுபவிக்க பல விதிகளை போதித்தது எனலாமல்லவா?

**விடை:** போகத்தைப் புசிப்பதென்பது ஜீவர்களின் ஸ்வபாவமாக இருக்கும் போது அவற்றைப் புசிக்க வேதம் விதி செய்ய வேண்டிய அவசியமென்ன? காக்கையே, நீ கறுத்திடுவாய்! அக்னியே, நீ சுடுவாய்! வேம்பே, நீ கசந்திடுவாய்! காற்றே, நீ சலித்திடுவாய்! என்று விதி செய்ய வேண்டிய அவசியம் என்ன?

ஆகையால் வேதமானது போகத்தைத் தரக்கூடிய கருமங்களை விலக்கியதே தவிர அவற்றை 'விதிக்க வில்லை' என்பதை அறிவாயாக.

மேலும் கர்மகாண்டத்தில் பூர்வபட்சமாக (preliminarily) விதித்திருப்பதைக் கவனிக்க வேண்டும். வேதம் கூறுகிறது: மதுவையும் மாமிசத்தையும் புசிக்க நீ விரும்பினால் யாகங்களைச் செய்து அவற்றைப் புசிப்பாய்; காம இச்சை கொள்வாயாயின், விவாகம் செய்து கொண்டு மனைவியுடன் வாழ்வாய். இவ்வாறு கூறுவதன் நோக்கம், ஒருவன் மனம் போனபடியெல்லாம் போகங்களில் ஈடுபடுவதைத் தடுப்பதேயாகும்.

ஆகையால் ஒருவன் போகங்கள் எல்லாவற்றையும் விட்டு ஒழிக்க வேண்டுமென்பதே வேதத்தின் நோக்கமாகும்.

மது, மாமிசங்களைப் புசிக்க அனுமதித்த வேதமானது பின்னர் அவற்றை முகர்ந்தால் போதும் என்பதையும்,

மனைவியுடன் கூடும் இன்பமும் மக்கட் பேற்றிற்காகவே என்று விதித்திருப்பதையும் கவனிக்க வேண்டும். தவிரவும் துறவிக்கும் நைஷ்டிக பிரம்மசாரிக்கும் நிபந்தனைகள் இல்லையென்பதையும், அவர்கள் போற்றப் பட்டிருப் பதையும் கவனிக்க வேண்டும்.

ஆகையால் கர்மங்களில் பற்றுதல் வைக்காமல் ஞான நாட்டம் கொண்டு பிரம்மானந்தத்தைப் பெற வேண்டும்.

29. **வினா:** அஞ்ஞானத்திற்கு ஞானம் விரோதமானதென்றால் பரிசுத்தமான ஞானத்துடன் அஞ்ஞானமும் ஒன்றாய்ப் பொருந்தி எல்லாக் காரியங்களையும் எப்படிச் செய்ய முடியும்?

**விடை:** ஞானம் இரு வகைப்படும். அவை ஸ்வரூப ஞானம் (Self-knowledge; non-mediated knowledge), விருத்தி ஞானம் (objective knowledge; mediated knowledge) என்பனவாகும். ஸ்வரூப ஞானம் என்பது யதார்த்த ஞானமான ஆன்மப் பிரகாசமே. அது அஞ்ஞானத்திற்கு விரோதியல்ல என்பதை சுழுப்தி அனுபவத்தினால் அறியலாம். அந்தக்கரண விருத்தி என்பது (எதிரிட்டறியும் தன்மை) சுழுத்தியில்லாத போதும், அஞ்ஞானத்தை அழிக்காது ஸ்வரூப ஞானம் நிற்பதனால், சுழுத்தி அஞ்ஞானத்திற்கு ஸ்வரூப ஞானம் நேர்விரோதியல்ல. ஆனால் விருத்தி ஞானமோ, ஆன்மவிசார சமாதி வாயிலாக அஞ்ஞானத்தை சுட்டெரித்து விடுகிறது. ஸ்வரூப ஞானமே விருத்தி ஞானமாகத் தோன்றுகிறது.

30. **வினா:** சுழுத்தி நிலையில் அஞ்ஞானத்தை அழிக்க முடியாத ஸ்வரூப ஞானம், பிறகு விருத்தி ஞானமாக மாறும் போது மட்டும் எப்படி அஞ்ஞானத்தைப் போக்க முடியும்?

**விடை:** சூரியன் தனது கிரணங்களால் பூமி முழுவதையும் பிரகாசமடையச் செய்தாலும், அது எதையும் எரிப்பது இல்லை. ஆனால் அச்சூரியகிரணங்கள் சூரிய காந்தக் கண்ணாடி (Lens)யின் மூலம் பிரகாசிக்கும் போது எதையும் எரிக்கும் சக்தியைப் பெறுகிறது.

அதைப்போல ஸ்வரூப ஞானம், சமாதியில் விருத்தி ஞானமாக மாறும்போது, அஞ்ஞானத்தை எரித்துவிடும் சக்தியைப் பெறுகிறது. (பாடல் 180)

31. வினா: மனோ வாக்கு காயம் ஆகிய திரிகரணங்களால் செய்யப்படும் செயல்கள் யாவும் 'கர்மங்கள்' அல்லவா? விருத்தி ஞானமும் அந்தக்கரண செயலாகுமே! அவ்வாறிருக்கக் 'கர்மம்' அஞ்ஞானத்தைப் போக்கு மென்று கூறலாமல்லவா? அதற்கு விருத்தி ஞானம் என்று ஒரு சிறப்புப் பெயர் ஏன் சூட்ட வேண்டும்?

விடை: ''நானார்?'' என்ற உள்நோக்காகிய விருத்தி ஞானமும் கர்மங்களைப் போல மனோ விருத்திதான் என்றாலும் ஒரே தாயின் வயிற்றுப் பிள்ளைகள் தங்களுக்குள்ளேயே பகைத்துக் கொள்வது போல அந்தக்கரண விருத்தியாகிய ஞானம், கர்மத்திற்குப் பகையே ஆகும். கர்மங்கள் 'நான்' என்ற ஆணவமுள்ள 'புருஷ தந்திரங்களே' யாகும். புருஷ தந்திரம் என்பது ஒரு ஜீவன் தான் விரும்பிச் செய்யும் காரியமாகும்.

ஆனால், அந்தக்கரண விருத்தியாகிய ஞானம் 'வஸ்து தந்திரமாகும்.' அது பரமாத்மாவின் ஆதீனத்தில் உள்ளது. அதை ஜீவன், தான் விரும்பியபடி விட்டுவிடவோ, ஏற்றுக் கொள்ளவோ முடியாது.

மனம், வாக்கு, உடம்பு இவைகளின் செயலான தியானம் முதலியவையும், விசாரத்தால் உண்டாகும் ஞானமும் வேறானவையாகும். தியானம் கற்பிதமேயன்றி உண்மைப் பொருளாகாது, பிரத்யட்ச ஞானமே சத்தியமாகும். படித்து, கேட்டு அதன்படி தியானிப்பது கற்பிதமேயன்றி மெய்யாகாது.

ஆகையால் அஞ்ஞானம் என்ற அவித்தை நாசமாவது ஞானத்தால் ஆகுமேயன்றி, கர்மங்களால் ஆகாது.

பிரம்ம ஸ்வரூபத்தைத் தியானிப்பது பாவனா ரூபமாகும். பாவனையானது பாவ பலத்தால் பாவனாதீதமாகி ஸ்வரூப ஞானம் பெறுவதே உண்மையாகும்.

பகவான் ஸ்ரீ ரமண மகர்ஷிகள் கூறுகிறார்: ''தியானிப்பதில் தியானிக்கும் ஒருவர், தியானிக்கப்படும் வஸ்து ஒன்று என்று இதில் துவைத பாவமிருக்கிறது. ஆனால் விசாரமானது நேராக ஆன்ம ஸ்வரூபத்தில் ஒன்றித்துப் போவதாகும்.

32. **வினா:** 'தியானம்' உண்மையானதாகாது எனின் அது மெய்யான மோட்சத்தைத் தரக்கூடிய வலிமையைப் பெறுவது எப்படி?

**விடை:** நிலையற்ற எண்ணத்தில் நிலையற்ற உடலுடன் நிலையற்ற உலகத்தை காணுகின்றோம். ஆனால் திடமான எண்ணத்தில் (பாவனையில்) திடமான உடலுடன் உலகத்தைக் காண்கின்றோம். ஆகவே மரண காலத்தில் ஒருவன் எதைச் சிந்தித்தவாறு இறக்கிறானோ, அதுவாகவே அவனது மறு ஜன்மம் அமைகிறது. ஆகையால் ஆத்ம ஸ்வரூபத்தையே சதா பாவித்த ஒருவன் தொடர்ச்சியாகிய பிறப்பும் இறப்பும் கெட அந்த ஸ்வரூபமாகவேயாகிறான். இதுவே உண்மை.

33. **வினா:** பிரம்ம ஸ்வரூபத்தைத் தியானிப்பதால் ஒருவன் பிரம்மநிலை எய்தலாமெனின் 'விசாரம்' தேவையில்லையல்லவா?

**விடை:** ஆரம்ப காலத்தில் செய்யும் தியானம் பரோட்ச ஞானம் – கேள்வி ஞானமேயாகும். இந்தத் தியானம் திடப்பட்டால் அதுவே அபரோட்ச ஞானம் எனப்படும். அதுவே ஸ்திரமான விசார ஞானமெனப்படும் முக்தியுமாகும். இது வேதவாக்கு என்பதை அறிக.

34. **வினா:** அவ்வாறெனின் முக்தி நிலையாகிய பூரண பிரம்ம ஸ்வரூபத்தில் அந்தக்கரண சம்பந்தமுள்ள 'விருத்தி ஞானமும்' கூடியிருக்குமோ? அப்படி இருக்குமானால் அகண்டாகார (அத்துவித) அனுபவம் எப்படி ஏற்படும்?

**விடை:** நீர் நிறைந்துள்ள ஜாடியில் உள்ள சேற்றை வேறாகப் பிரிக்கும் தேற்றாங்கொட்டைப் பொடியும் அந்தச் சேற்றுடன் அழிந்து போகிறது.

அதைப்போல விருத்தி ஞானமும் அஞ்ஞானத்துடன் சேர்ந்து அழிந்துபோகும். விருத்தி ஞானம் என்பது சத்வகுண மாயை ஆகும். இது அவித்தையை அழிக்கும் வல்லமை உள்ளது.

அசுத்த மாயையுடன் இந்தச் சுத்த மாயையும் சேர்ந்து, 'பிணம் சுடும் தடிபோல' தானும் அழிந்து போக, அகண்டாகார அனுபவம் சித்திக்கும்.

35. வினா: இந்த அகண்டாகார அனுபவம் ஜீவன் முக்தர்களிடம் எப்போதும் நிலைத்திருப்பது எப்படி?

விடை: பகைவர்களே இல்லாதவனாய் கவலையற்று இப்பூமண்டலத்தை ஆளும் ஒரு சக்ரவர்த்தியைப் போலவும், நன்றென்றும், தீதென்றும் அறியாத குழந்தையைப் போலவும் ஜீவன் முக்தர்கள் சுகஸ்வ ரூபத்தில் நிலைத்திருப்பார்கள்.

பந்தம் என்று ஒன்று உண்டு, முக்தி என்று ஒன்று உண்டு என்று அறியாமையால் பலர் கூறுவதைக் கேட்டு அவர்கள் நகைப்பார்கள்.

ஒரு கொசு ஆகாயத்தை விழுங்கியது; பிறகு அதைக் கக்கியது என்று கூறுபவர்களைக் கண்டு யார்தான் நகைக்க மாட்டார்கள்?

எனவே ஜீவன்முக்தர்களின் சுவானுபூதி என்றும் எப்போதும் (போக்குவரத்து இன்றி) நிலையாக இருப்பதாகும். அறிவு, அறியாமை, பந்தம், முக்தி, சுவர்க்கம், நரகம் என்று கூறுவதெல்லாம் (ஜீவ, ஜகத், ஈஸ்வரன் எல்லாம்) கற்பனையே; அவை இடையில் தோன்றிய மனப்பிராந்தியே. மலடி மைந்தனும், ஜடமான கட்டையில் (மந்தவெளிச்சத்தில்) உதித்த ஒரு புருடனும், வானத்திலே பூத்த தாமரைப்பூவைச் சிரசில் தரித்துக் கொண்டு, (அந்தரத்தில்) நின்ற கந்தர்வ நகரத்திற்குப் போனார்கள்; அங்கே கிளிஞ்சலிலிருக்கும் வெள்ளியை விலை பேசும் போது தங்களுக்குள் சண்டையிட்டுக்

கொண்டார்கள்; அவ்வமயம் பாம்பாகக் கண்ட கயிறு தீண்டி இறந்து, அவ்விருவரும் பேயானார்கள்.

இக்கற்பனைக் கதையின் நியாயத்தைப் போலத்தான் இப்பிரபஞ்ச சிருஷ்டியும் மாயையாகும் என்று திடமாய் உணர்ந்தவன் ஜீவன்முக்தன் ஆவான்.

மாயை என்று சொல்லப்படுவது பொய்யானது எனும் போது அதனால் உண்டான பொருள்கள் எல்லாமே மித்தையல்லவா? தாயின் பிறப்பே பொய்யெனும் போது அவள் புத்திரர்கள் அவர்களின் ஜாதி என்பனவெல்லாம் பொய்யாகுமல்லவா? ஆகையால் சுவர்க்கம், நரகம், நன்மை, தீமை என்ற அஞ்ஞானத்தையெல்லாம் விட்டொழித்து சத் சித் ஆனந்தமான உனது பூரண ஸ்வரூபத்தில் நிலைத்திரு.

36. **வினா:** *ஜகத் சிருஷ்டியே மாயை; பிரமன் முதலான தேவர்களும், வேதங்கள் நான்கும், சாஸ்திரங்கள் ஆறும், மகா மந்திரங்களும் – இவையெல்லாம் பொய்யானவை, மித்தை என்று கூறலாமா? அவ்வாறு கூறுவது குற்ற மாகாதா?*

**விடை:** கனவில் பார்த்ததைப் பொய்யென்று கூறுவது குற்றமாகுமா? கனவு போன்ற மாய காரியங்களான ஜகத், ஜீவ, ஈஸ்வராதிகளும் மித்தையே என்று கூறுவது குற்ற மாகாது.

''ஞான காண்டத்தில்'' வேதங்களே நாமரூபங்களை 'மித்தை' என்று ஓதுக்கியிருக்கின்றன. அந்த நாம ரூபங்களைப் போற்றி வழிபடுபவர்களையே புண்ணியவான்கள் என்று ''புராணங்கள்'' கூறுகின்றன. அப்படியிருக்கும் போது வேதங்களில் 'சத்தியம்' என்று கூறப்பட்ட உண்மையை 'உண்மை' என்று சாதிக்கும் ஞானியைக் குறை கூறக்கூடிய சாஸ்திரமும் உண்டா? (இல்லையென்றவாறு)

37. **வினா:** *மாயை என்பது என்ன?*

**விடை:** மாயை அநிர்வசனீயம் எனப்படுகிறது. அதாவது மாயை இப்படிப்பட்டதென வார்த்தைகளால் விளக்கிக் கூறமுடியாது.

38. **வினா:** மாயை வலைப்பட்டவர் (சிக்கியவர்) யார்?

**விடை:** ''இந்த உடலே நான்'', ''இது என்னுடையது'' ''இவ்வுலகம் உண்மையானது'' என்ற அபிமானமுடையவர்களே மாயையின் வலைப்பட்டவர்கள் ஆவர்.

39. **வினா:** மாயை எப்படி ஏற்பட்டது?

**விடை:** மாயை மித்தையானது கற்பிதமானது. அது எப்படி ஏற்பட்டது என்று சொல்ல இயலாது.

40. **வினா:** மாயை ஏற்படக் காரணம் என்ன?

**விடை:** கற்பிதமானது ஏன் ஏற்பட்டது என்ற கேள்வியும் கற்பிதத்தைச் சேர்ந்ததன்றோ? ஆகவே, கேள்வி கேட்பவர் ஞான விசாரம் செய்யாத காரணத்தால் துன்பம் தரும் இந்த மாயை ஏற்பட்டது என்று கூறவேண்டும். கற்பிதமான மாயை ஏன் ஏற்பட்டது என்ற கேள்வியும் கற்பிதத்தைச் சேர்ந்ததே.

41. **வினா:** இப்பிரபஞ்சம் மாயையானது பிரம்மத்தினின்றும் அது வேறானது எனின் பிரம்மமும் த்வைதமாகுமல்லவா?

**விடை:** ஜால வித்தைக்காரன் காட்டும் வித்தைகள் அவ்வித்தைக்காரனின்றும் வேறல்ல; ஆனால் மாயையும், மாயா காரியங்களும் பொய்யாகப் போக, அவற்றிற்கு ஆதாரமான பிரம்மம் மட்டுமே உண்மையானதாகும்.

பிரம்மத்தின் மாயா சக்திகள் பலப்பல; அம்மாயா சக்திகளை அறிய இயலாது. ஆகையால் பஞ்சபூதங்களைப் பார்த்து, அனுமானத்தால் அச்சக்தியே எங்கும் வியாபித்து உள்ளது என்று அறிய வேண்டும். மித்தையான ஜகம் தோன்றுவதால், அதைத் தோற்றுவிக்கும் மித்தையான மாயா சக்தி ஒன்று உண்டு என உணரவேண்டும்.

42. **வினா:** மாயையும் பிரம்மமும் ஏக வஸ்துவே என்று கூறுவதானால் மாயையைப் போல பிரம்ம வஸ்துவும் பொய்யாகும் அல்லவா?

**விடை:** ஜால வித்தைக்காரன் காட்டும் மாயா ஜாலம் பொய்யாகப் போக (வித்தை முடிந்ததும்) அதைக் காட்டும் வித்தைக்காரன் மட்டும் மெய்யாக இருப்பது போல மாயையும் மாயையின் செயல்களும் பொய்யாகப் போக பிரம்மம் மட்டும் 'மெய்யாக' உள்ளது என்று அறிக.

43. **வினா:** மாயா சக்தியானது பொய்யானது, மித்தையானது என்றால் அப்படி மாயையென்று ஒன்று இருக்கிறது என்று எவ்வாறு கூறமுடியும்?

**விடை:** ஜட வஸ்துக்களான புல், பூண்டு, செடிகொடிகள், மரங்கள் முதலியன வளர்வதும், மலர்வதும், காய்த்துப் பழுத்து உதிர்வதும்; முட்டையிலிருந்து குஞ்சுகள் பல நிறங்களில் வெளிவருவதும் ஆகிய இவை எல்லாம் பெரும் அதிசயமல்லவா?

இவற்றிலெல்லாம் 'சிற்சக்தி'யில்லை யெனின் சராசரப் பொருள்களின் தன்மைகளெல்லாம் தலைகீழாக மாறிவிடும்! நெருப்பு, தண்ணீரைப் போலக் குளிரும்! கசப்பு இனிப்பாக மாறும்! மலையும் மேகத்தைப் போல் எங்கும் சஞ்சரிக்கும்! பெருங்கடல்கள் எல்லாம் மணல் வெளியாகும்! இவ்வாறு இயற்கை தனது ஸ்வபாவத்தை இழக்க, விபரீதம் ஏற்படும்! 'நியதி' என்ற ஒன்று இல்லாமல் போகும்.

பிரம்மப் பிரகாசமே பகிர் (வெளி) முகத்தில் காண்பான்-காட்சி என்னும் பொய்யான மாயையாகவும், அந்தர்(உள்) முகத்தில் உண்மையான சித்சக்தியாகவும் இருக்கிறது. இந்த சித் சக்தியே எல்லாவற்றிற்கும் உள்ளீடாக இருந்து அவற்றைச் செயல்படச் செய்கிறது என்பதை அறிக.

44. **வினா:** மாயை அறியவொண்ணாதது; இப்படிப்பட்டதென விவரிக்க இயலாதது என்றால் அம்மாயையை நீக்குவது

எப்படி? பிரம்ம பாவம் பெறுவது எப்படி? முக்தி எப்படி சித்திக்கும்?

**விடை**: ஏகாக்ர சித்தத்துடன் பிரம்மத்தில் நிலைத்து நின்று, வேறு எதையும் நினையாதிருந்தால் மாயையானது ஒழிந்து போகும், மீண்டும் தோன்றாது.

இதைத் தவிர மாயையை வெல்லும் வேறு எந்த வழியையும் வேதங்கள் கூறவில்லை.

குயவன் செய்யும் பானை மண்ணேயானாலும், உருவத்தைக் கொண்டு அதைப் 'பானை' என்கிறோம். பானை உருவாவதற்கு முன் அம்மண்ணில் மறைந்திருந்த சக்தியே பிறகு 'பானை' என்ற நாமரூபம் பெற்ற 'காரியமாகிறது', பானை உடைந்து போனால் நாம ரூபம் நசித்துப் போய் மீண்டும் அது 'மண்' என்ற பெயரையே பெறுகிறது.

ஆகையால் 'காரிய' மாகிற 'பானை' என்ற சொல் இடையில் தோன்றியது. முதலில் இருந்ததும் 'மண்' முடிவில் இருப்பதும் மண்ணேயாகும். இதைப் போலவே மாயையின் செயலான நாம ரூப பிரபஞ்சமெல்லாம் பொய்யே. மாயைக்கு ஆதாரமான பிரம்மம் ஒன்றே சத்திய வஸ்துவாகும். ஆகையால் கற்பிதமான நாம ரூபத்தோற்றங்கள் அனைத்தையும் விலக்கி சின்மயமான பிரம்ம ஸ்வரூபமாக மாத்திரம் இருந்தால் மாயையின் மெய்போல் காணும் தன்மை ஒழிந்து போகுமெனத் தெளிவு பெறுவாயாக.

தன்னை தரிசித்தால் தனது சாயையான திரிஸ்யம் (காட்சி) தானே நீங்கும். ஞானத்தை அறியும் அறிவு 'காரண'மாகும்; நாம ரூபங்களான ஜீவ, ஈஸ்வர, ஜகத் முதலியவை காரியமாகும். இவற்றின் உற்பத்தியும், அழிவும் எப்படி ஏற்படுகின்றன என்று விசாரிப்பதால் என்ன பயன்? உலகங்களின் சிருஷ்டி நீண்ட கனவு போன்றது. அவற்றைப் பற்றி விசாரிக்காமல் நமது ஆன்மஸ்வரூபத்தில் நிலைத்திருத்தலே அறிவுடைமையாகும்.

அசத்தாகிய நாமரூபத்தில் உள்ள பற்றுதல் எவ்வளவு விடுபடுகிறதோ, அவ்வளவுக்கு 'உள்முக நாட்டம்' உண்டாகும். இவ்விதம் தொடர்ந்து செய்யும் ஆத்ம விசாரத்தால் மனம் உள்முக நாட்டம் பெற்று ஆத்மஸ்வரூபத்தில் நிலை பெறும். இவ்வாறு ஆத்மஸ்வரூபத்தில் நிலைத்து விட்டால் நிலைத்த ஆனந்தத்தைப் பெறலாம். இதுவே ஜீவன் முக்த நிலையாகும். (பாடல் 207)

45. **வினா:** ஆன்மா சத்-சித்-ஆனந்த ஸ்வரூபமாய் எப்போதும் உண்டெனில், உடம்புடன் கூடிய சகல ஜீவர்களின் இருப்பிலிருந்து ஆன்மாவின் ''சத்'' அம்சம் தெரிகிறது. மேலும், உலக வெளி அனுபவம் விளங்குகின்றதால் ஆன்மாவின் சித் அம்சம் தெரிகிறது. ஆனால் எல்லா விடயங்களிலும் மூன்றாம் அம்சமான ஆனந்தம் தோன்றுவதில்லையே ஏன்? (பாடல் 208)

**விடை:** ஒரு மலரில் அதன் வடிவம், நிறம், மணம் இவை மூன்றும் ஒன்றாகச் சேர்ந்து விளங்கினாலும், புலன்கள் ஒவ்வொன்றும் அதற்குரிய ஒரு குணத்தை மட்டும்தான் (நாசி மணத்தையும், கண்கள் நிறம், வடிவம் ஆகியவற்றை அறிகின்றன) அறிய முடியுமேயன்றி, மற்றதன் குணத்தை அவை அறியாதது போல, ஆன்மஸ்வரூபம் சச்சிதானந்தமே யானாலும், பிரபஞ்ச மயமான விருத்திகளின் பேதத்தால் (ஹஉனீபுயஙி ழ்ஙியயூ) அம்மூன்று அம்சங்களின் வெளிப்பாடு வேறுபட்டுள்ளன என்பதை அறிக.

மேலும் முக்குணங்களால் உண்டாகும் விருத்திகளும் மூன்றாகும். சத்வகுணம் சாந்த விருத்தியாகும். இராஜஸ குணம் கோர விருத்தியாகும். தாமஸ குணம் மூட விருத்தியாகும்.

சத்-சித்-ஆனந்தம் ஆகிய குணங்கள் ஆன்மாவில் ஏகமாக இருப்பினும், இவ்விருத்தி பேதங்களால் அவை ('காணும் உலகில்') வேறுபடுகின்றன.

மரம், கல், மண் முதலிய ஜடவஸ்துக்களின் 'மூட' விருத்தியில் 'சத்' மட்டுமே வெளிப்படும். காமக்ரோதாதி குணங்கள் போன்ற 'கோர' விருத்தியில், 'சத்தும், சித்தும்' வெளிப்படும்; ஆனால் ஆனந்தம் உதிக்காது. பொறுமை, கருணை முதலிய சாந்த விருத்திகளில் சத்-சித்-ஆனந்தம் ஆகிய முக்குணங்களும் வெளிப்படும்.

ஆகையால் மூட, கோர விருத்திகளை நீக்க வேண்டும்; வைராக்யமும், சாந்தமும் கூடிய மனதுடன் கூடிய 'உள்முக' விருத்தியுண்டானால் 'ஆனந்தம்' வெளிப்படும். எனவே சத்தும், சித்தும் போலவே ஆனந்தமும் ஆன்மாவின் ஸ்வரூபமேயாகும் என்பதை அறிக.

46. **வினா:** *சத்-சித்-ஆனந்தம் என்பதன் இலக்கணம் என்ன? 'சத்' என்பதென்ன? 'சித்' என்பதென்ன? 'ஆனந்தம்' என்பதென்ன?*

**விடை:** முக்காலத்திலும் அழியாதிருப்பதே 'சத்'தின் இலக்கணமாகும்.

விஷயங்களில் வேறுபாடுகளை அறிவதே 'சித்'தின் இலக்கணமாகும்.

ஒருவர் விரும்பும் பொருள் அவருக்குக் கிடைத்து அதை அனுபவிக்கும்போது அவர் பெறும் சுகமே 'ஆனந்தத்தின்' இலக்கணமாகும்.

47. **வினா:** *நிர்மலமான இடைவிடாத சத்-சித்-ஆனந்தமே 'நான்' என்பதை ஒருவர் எந்த அனுபவ வாயிலாக அறிய முடியும்?*

**விடை:** தான் (ஆன்மா) சத் (உண்மைவஸ்து) என்பதற்கு அனுபவ விளக்கம்:

ஒருவன் முற்பிறவிகளில் செய்த கர்ம பலனை அனுசரித்தே இப்பிறவியை எடுக்கிறான் என்பதால், அம்மனிதன் சென்ற காலத்திலும் இருந்திருக்க வேண்டும் என்றாகிறதல்லவா? இவ்விதமே இப்பிறவியில் அவன் கர்மபலனை அனுசரித்து மேலும் அவனுக்குப் பிறவி உண்டாகும் என்பதனால்

வருங்காலத்திலும் அவன் தொடர்வான் அன்றோ? இவ்வாறு ஒரு மனிதன் பல பிறவிகளை எடுத்தாலும், அவனது சரீரங்கள் அழிந்தழிந்து அவன் புதிய சரீரங்களைப் பெற்றாலும், அவன் தொடருவது கொண்டு ''சத்'' எனும் அம்சத்தை தன்னிடத்தில் அறியலாம்.

ஆன்மா ''சித்'' (அறிவு) என்பதற்கு அனுபவ விளக்கம்:

இருள்மயமான சுழுப்தி (தூக்க) அவஸ்தையில் எல்லாம் ஒடுங்கியிருக்கும்போது ஒடுங்கியிருக்கும் நிலையையும் நாம் அறிகிறோம். அந்நிலையில் சுகத்தையும் நாம் அனுபவிக்கிறோம். சூரிய சந்திரர் பிரகாசமில்லாத இரவில் ஸ்பரிசத்தால் பொருள்களை அறிகிறோம். இருளையும் அறிகிறோம். இவற்றிலிருந்து ஆன்மா சித்வஸ்து என்பதை அறியலாம்.

ஆன்மா ''ஆனந்தஸ்வரூபம்'' என்பதற்கு அனுபவ விளக்கம்:

இவ்வுலகில் சுகம் கொடுக்கும் வஸ்துவிலேதான் ஒருவருக்குப் பிரியம் ஏற்படுவதாலும், அனைவருக்கும் தன்னிடத்திலேதான் மிகவும் பிரியமென்பதாலும், தானே ஆனந்தமய சொரூபன் என்பது விளங்கும்.

மேற்கூறியவற்றிலிருந்து ஆன்மா சத்-சித்-ஆனந்தமானது என்பது வெளிப்படை.

48. **வினா:** ஆன்மாவை சுகம் தரும் ஒரு 'சாதனமாகக்' (உபுஷி) கருதலாம் அல்லவா?

**விடை:** ஆன்மாவே ஆனந்த ஸ்வரூபமாகும்; அது சுகம் தரும் ஒரு சாதனமல்ல.

ஏனெனில் சுகமாகிய ஆனந்தம் வேறு, அதை அனுபவிக்கும் ஆன்மா வேறு என்றாகும்.

சுகத்தைத் தரும் ஆன்மா ஒன்றும், அதை அனுபவிக்கும் ஆன்மா ஒன்றும் என இரண்டு ஆன்மாக்களா உள்ளன? அவ்வாறு ஆகாது. ஆகவே ஆன்மாவே ஆனந்த

ஸ்வரூபமானதாகும். மேலும் விஷய சுகத்தால் உண்டாகும் ஆனந்தம் மிகவும் அல்பமேயாகும். ஆன்ம சுகமோ எல்லையற்றது. நாம் விஷய சுகத்தை வெறுக்கவோ ஏற்கவோ முடியும். ஆனால் ஆத்மானந்தத்தை விட்டு விடுபவர்கள் யாருளர்? ஆத்மானந்தம் நித்ய சுகமாகும்.

49. **வினா:** சிலர் மனம் நொந்தோ அல்லது அதிக கோபத்தின் வசப்பட்டோ தற்கொலை செய்து கொள்கிறார்களே! அப்படியிருக்கச் சுகம் தராத ஆன்மாவை ஒருவர் விட முடியாது என்று எப்படிக் கூறமுடியும்?

**விடை:** ஒருவன் தனக்குத் துன்பம் தரும் உடலின் மேல் வெறுப்படைந்து அதனை விடுகிறானேயன்றி, தனது ஆன்மாவையல்ல. ஆன்மாவே தானாக இருக்கும்போது அதை விடுவது என்பதும், கொள்வது என்பதும் இல்லை. ஆன்மாவை ஆன்மாவே வெறுப்பது என்பதுமில்லை.

50. **வினா:** ஒருவனுக்கு அதிகப் பிரியமானது அவனது ஆன்மாவேயென்றால், அவன் தனது புத்திரன், செல்வம், ஆகியவற்றின் மேல் பிரியம் வைக்கக் காரணமென்ன?

**விடை:** ஒருவனுக்கு செல்வத்தின் மேல் உள்ள பிரியத்தைவிடத் தன் புத்திரன்மேல் உள்ள பிரியம் அதிகமாகும்; புத்திரனைவிடத் தனது 'சரீரத்தின்' மீது அவனுக்குள்ள பிரியம் அதிகமாகும்.

அதைவிடத் தன் 'இந்திரியங்களின்' மீது (புறக் கரணங்களின் மீது) உள்ள பிரியம் அதிகமாகும்.

இந்திரியங்களை விட ''அந்தக் கரணங்களின்'' மீதுள்ள பிரியம் அதிகமாகும்.

கரணங்களை விட 'உயிர்' அதிகப் பிரியமானதாகும். உயிரைவிட ஒருவன் அதிகமாக நேசிப்பது தன் 'ஆத்மாவை'த்தான்.

ஒருவனுக்கு ஆத்மாவை விட அதிகப் பிரியமானது வேறொன்றும் இல்லை. ஏனென்றால் ஆன்மா ஆனந்த ஸ்வரூபமானதாகும்.

செல்வம் முதலிய ஆறுவிதமான பிரியமும் கௌணம் (secondary) எனப்படும்.

கௌணப் பிரியங்களை விட ஆன்ம பிரியமே நிலையானது, முடிவானதாகும்.

51. வினா: ஆத்மானந்தமே முடிவானதெனின் புத்திரன் முதலிய எல்லாவற்றையும் 'ஆன்மா' என்று ஏன் கூறவேண்டும்?

விடை: ஒருவனுக்கு அவனது செல்வத்தைக் காட்டிலும் தன் மகனான ''கௌண'' ஆத்மாவே முக்கியமானதாகும். இருப்பினும் அம்மகனைவிட ஒருவனுக்கு தனது சொந்த உடலான ''மித்தை (பொய்யான) ஆத்மாவே'' முக்கியமானதாகும்.

அவன் சொர்க்கம் போன்ற நற்கதியை விரும்பும் காலத்து அவனுக்கு ''ஜீவாத்மா''வே முக்கியமானதாகும்.

அவன் மோட்சத்தை விரும்பும் காலத்து அவனுக்கு ''ஞானாத்மா''வாகிய தன் ஸ்வரூபமே முக்கியமானது ஆகும்.

ஒருவனுக்கு அந்தந்த அவஸ்தையின் போது (நிலையின் போது) முக்கியமாக விளங்கிய பூர்வபட்சமானவைகளே (Preliminary) பின் கைவிடப்படுகின்றன. ஆனால் நிலையாக உள்ள ஆத்மாவே முக்கியமானது என்னும் போது அது 'சிதானந்தம்' எனப்படுகிறது.

மேலும், உலகில் அஞ்சத்தக்கப் புலியும் அனுகூலமாயின் விரும்பப்படும்; புத்திரனாயினும் பகைப்பானாயின் வெறுக்கப்படுவான். இவ்விரண்டு வகையிலும் சேராத புல் பூண்டு போன்ற அற்பப் பொருள்களில் உதாசீனம் காட்டுகிறோம். இவ்வாறு விருப்பு, வெறுப்பு உதாசீனம் என்று மூவித மாறுபாடுகளும் இல்லாத – நிரந்தரமாய் விரும்பப்படும், ஆனந்த ஸ்வரூபமாய் உள்ள - ஆத்மாவை ஆராய்ந்து அறிய வேண்டும்.

52. வினா: ஆத்மா நிரதிசயமானது எனப்படுகிறதே; அவ்வானந்தத்தின் வகைகள் யாவை?

விடை: ஆனந்தம் மூன்று வகைப்படும். அதனையே எட்டு வகையாக கூறுவர். அவை:

1) விஷயானந்தம்: எதிரிட்ட விஷயங்களில் நாட்டம் ஏற்பட்டு அவற்றை அனுபவிக்கும்போது ஒருவன் பெறும் சுகம் விஷயானந்தமாகும். ஆகவே விஷயங்களாகிய வெளிநாட்டத்தில் களைப்புற்று மனம் அதே அறியாமை யுடன் உறக்கத்தைத் தன்னுள் (சூனியமான விஷயமாக) எதிரிட்டு நாடும் போதுள்ள சுகமே (மூலமான) விஷயானந்தம் எனலாம்.

2) பிரம்மானந்தம்: ஆழ்ந்த தூக்கத்தில் ஒருவன் அனுபவிக்கும் சுகம் பிரம்மானந்தமாகும்.

3) வாசனானந்தம்: தூக்கம் கலைந்து, விழிப்பு நிலை ஏற்படும் முன்னர் சிறிது நேரம் மோகமான தூக்கத்தின் வாசனையாக அனுபவிக்கப்படும் சுகம் வாசனா னந்தமாகும்.

4) நிஜானந்தம்: சுகத்திற்கும் துக்கத்திற்கும் இடையேயுள்ள மோனம் நிலவும்போதும், இரு எண்ணங்களுக்கு இடையே உள்ள சிந்தனையற்ற இடைவெளியில் ஒருவன் உதா சீனமாய் இருக்கும்போதும் பெறும் சுகம் உதாசீன சுகம் என்னும் நிஜானந்தமாகும்.

5) முக்கியானந்தம் (யோகானந்தம்): ஒருவன் தன் உடலை மறந்த சமாதி நிலையில் பெறும் சுகம் முக்கியானந்தமாகும்.

6) அத்வைதானந்தம்: துவைத பாவம் நீங்கி, ஒருவன் அத்வைதமாய்த் தன் நிலையில் நிற்பதால் பெறும் சுகம் அத்வைதானந்தமாகும். அதாவது உலகின் நாம, உருவ அம்சங்களைக் கவனியாது ஆதாரமாயுள்ள ஏகத்வமாகிய சச்சிதானந்தத்தை நோக்கவே அத்வைதானந்தமாகும்.

7) ஆத்மானந்தம்: அனைத்து செயல்களும், உறவுகளும், மிகப் பிரியமான தன் ஆன்மாவின் பொருட்டே என்று உணர்தல் ஆத்மானந்தமாகும்.

*8) வித்தியானந்தம்: ''அதுவே நீ'' என்னும் மகா வாக்கிய விசாரத்தை விளக்கும் நூல்கள் படித்து தான் சத்-சித்-ஆனந்த சொரூபன் என்னும் திடம் பெறும் அந்தவித்யா விசாரத்தினால் அடைகின்ற சுகம் வித்யானந்தமாகும்.*

53. **வினா:** *ஒருவன் தூக்கத்தில் பெறும் சுகத்தைப் 'பிரம்ம சுகம்' (பிரம்மானந்தம்) என்று வேதங்கள் கூறுவதன் கருத்து என்ன?*

**விடை:** *தூக்கத்தில் ஜீவன் சுகரூபமான பிரம்மானந்தத்தை அனுபவிக்கிறான். தூக்கம் சுகத்தைத் தருவதால்தான் ஒருவன் சொகுசான படுக்கை, தலையணை ஆகியவற்றைத் தேடிக்கொண்டு தூங்குகிறான். இவ்வாறு ஒரு ஜீவன் தூக்கத்தில் பிரம்மானந்தத்தை அனுபவிக்கிறான்.*

*இத்தூக்க நிலையில் இராகத்துவேஷாதி குணங்களும், இடம், காலம் போன்ற பேதங்களும் அற்று 'மனம் ஒடுங்கிய' நிலையில் ஜீவன் ஆனந்த அனுபவம் பெறுகிறான்.*

*ஆகையால் தூக்க சுகம் 'பிரம்ம சுகம்' எனப்படுகிறது.*

*எனினும் இந்தச் சுகம் மாயா சம்பந்தமுள்ளது. அங்கு அறிவு (விருத்தி ஞானம்) பிரகாசிக்கவில்லை. உறங்குபவன் இருளில் மூழ்கி இருக்கிறான். தூக்கம் கலைந்து விழிப்பு நிலைக்கு வரும்போது ஜீவன், தனது கர்ம பலனை அனுசரித்து மீண்டும் அஞ்ஞானத்துடன் பொருந்தி செயல் படுகிறான்.*

*ஆகையால் ஒருவன் தூக்கத்தில் அனுபவிக்கும் சுகம் நிலைத்திருப்பதில்லை.*

54. **வினா:** *பிரம்மானந்தத்தின் இலக்கணம் எது?*

**விடை:** *விஷய சுகம் துன்பம் தரக்கூடியது. அறிபவன், அறிபடுபொருள், அறியும் அறிவு ஆகிய திரிபுடிகள் துன்பம் தருபவை என அறிந்து, களைத்துப் போன பருந்து தனது கூட்டில் சென்று அடங்குவது போல நித்திரை செய்யும் ஜீவன் முடிவற்ற பிரம்மத்துடன் ஒன்றிப் போகிறான்.*

தன்னையன்றி வேறு அறியாத அவ்வானந்தமே மேலான பிரம்மானந்தமாகும். இங்கு ''நித்திரை'' என்பது அறிதுயிலைக் குறிப்பதாகக் கொள்ள வேண்டும்.

அறிதுயிலில் ஒருவன் பெறும் ஆனந்தம் ''பிரம்மானந்தம்'' என்று கொள்வது வேதமுடிவான மகாவாக்கியப் பொருளாகும். நித்திரை நாடுபவர் முதலில் நல்ல புஷ்ப சயனத்தை நாடி, பின் அவ்வுணர்வும் கடப்பாராதலின் அவர்கள் அந்த கடந்த சுகத்தையே நாடினர் என்பதை ஊகிக்கலாம் அல்லவா? நன்மை, தீமை, ஆண், பெண், உள், வெளி என்ற வேற்றுமை அறியாது செய்கிற நித்திரை ஸ்வானுபவமாதலால் அது பிரம்மானந்தமாகிய அறிதுயில் எனப்படுகிறது. வேதம் காட்டும் ஆன்ம விசார முறையில் சுழுத்தியை நோக்கி உள்முகப்பட்ட ஆத்மா, பிரம்மத்துடன் ஐக்யப்பட்டு அதன் மயமாகி ஆனந்தமாய் இருத்தலின் அதுவே அறிதுயிலாம் பிரம்மானந்தம் எனப்படுகிறது.

55. **வினா:** நித்திரையில் ஒருவனது மனோமய கோசமும், விஞ்ஞானமய கோசமும் அழிந்துபோக அவன் பிரம்மானந்தத்தை அனுபவிக்கிறான். பிறகு விழிப்பு நிலையில் அவன் அவ்வானந்தத்தை நினைவு கொள்வது எப்படி முடியும்? அவ்வனுபவத்தை அறிய உதவும் விஞ்ஞானமய கோசம் தான் சுழுத்தியில் மறைந்து போயிற்றன்றோ?

**விடை:** வெண்ணெய், நெய் என்ற இருபெயர்களுக்கும் உருவத்தில் பேதமேயன்றி, அவற்றின் சுவையைப் பெறுகின்ற அறிவில் பேதமில்லை. வெண் நிறமும் உருவமும் பொருந்திய வெண்ணெயே உருகி நிறமும் உருவமுமற்ற நெய்யாக மாறுகின்றதன்றோ? இதைப் போலவே விஞ்ஞானமயன், ஆனந்தமயன் ஆகிய இரண்டும் வேறாகத் தோன்றினாலும், சேதனத்தால் (sentient) அவை வேறானவையல்ல.

விழிப்பு நிலையில் விஞ்ஞானமயமான ஆன்மாவே தூக்க நிலையில் பிரம்மானந்தத்தை அனுபவிக்கும் ஆனந்த மயனும் ஆவான்.

மேகம் பொழியும் மழைத்துளிகளும் குளத்து நீரும் வேறானவையல்ல.

வெல்லமும் அதன்பாகும் வேறானவையல்ல. இவற்றைப் போலவே விஞ்ஞானமயனும், ஆனந்தமயனும் வெவ் வேறானவையல்ல; அவை ஒரே ஆன்ம வஸ்து வாகும்.

56. **வினா:** *பிரம்மானந்தத்தை அனுபவிக்கும் ஜீவன் அதை இழந்து, விஞ்ஞான கோசம் பொருந்தி விழிப்பு நிலைக்கு வெளிவருவது ஏன்?*

**விடை:** ஜீவன் முற்பிறவிகளில் செய்துள்ள கர்மங்கள் அவனைச் சுழுப்தி நிலையிலிருந்து இழுத்து, விழிப்பு நிலையில் கருவி கரணாதிகளுடன் சேரும்படிச் செய்கின்றன. அப்படி விழிப்புற்றவன் முழுதும் அப்பிரம்மானந்தத்தை விட்டு நீங்காமலும், எழுந்து நடமாடாமலும் கிடப்பான். உறங்குவது போல் இருப்பினும் மறதி உண்டாகாததனால் க்ஷணிகரூபத்தில் பிரம்மானந்தத்தின் வாசனையைப் பருகுவன். இதுவே வாசனானந்தம். உடலே நான் என்ற நினைவு தோன்றுமாயின் ஜீவன் அக்கணமே அந்த வாசனாமயமான பிரம்மானந்தத்தை இழந்து விடுகிறது. பிறகு விழிப்புலகில் முன்வினைப் பயனைப் பொருத்து ஜீவன் இன்பத்தையோ துன்பத்தையோ அனுபவிக்கிறது.

57. **வினா:** *முக்கியானந்தத்தின் இலக்கணம் என்ன?*

**விடை:** சமாதியில், அறிவும் அறியாமையும் பொருந்திய அகந்தை அற்ற, அறிவில் சுகித்திருப்பவன் பெறும் சுகம் முக்கியானந்தம் எனப்படுகிறது. திசை, திருசியம் அறியாமலும், சுழுத்தி பொருந்தாமலும், உடல் கட்டை போல் அசையாமலும், சித்தம் சாந்த சம நிலையில் இருத்தலும் பெறின், முக்கியானந்தம் எனப்படும்.

58. **வினா:** *முக்கியானந்தத்தின் மகிமை என்ன?*

**விடை:** முக்கியானந்தத்தின் மகிமை எல்லையற்றது. மனிதன், மானுட கந்தர்வன், தேவ கந்தர்வன், பிதிர்,

ஆஜானதேவன் (அதாவது கற்பாரம்பத்திலேயே தேவனாக, தோன்றியவன்), கர்ம தேவன் (அதாவது தபோ யக்ஞத்தினால் அப்பதவி பெற்றவன்), தேவன், இந்திரன், பிரகஸ்பதி, பிரஜாபதியென்னும் விராட்புருஷன், இரண்யகர்ப்பன் என்னும் பிரமன் ஆகிய இந்தப் பதினொரு பேரும் கிரமமாக ஒருவரைவிட ஒருவர் பெறும் ஆனந்தம் நூறு மடங்கு பெரியது என்றால், இவர்கள் அனைவரின் மொத்த ஆனந்தம், முக்கியானந்தம் என்ற மகா சமுத்திரத்தில் தோன்றும் நுரைக்குத்தான் சமமாகும். ஆகையால் முக்கியானந்தத்தின் மகிமைக்கு எதுவும் ஈடாகாது. துரியாதீதமான இந்த ஏழாம் பூமியில் ஒரு மகாபுருஷன் இருப்பானேயாகில் அவன், பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் ஆகிய மும்மூர்த்திகளுக்கும் சம மானவன். நாரதர், சுகர் போன்ற ஞானிகளுக்கும் சமமாவான்.

59. வினா: ஆத்மா சத்சித் ஆனந்த ஸ்வரூபமானது என்று கூறும்போது சத், சித், ஆனந்தம் என்னும் சொற்கள் தனித்தனியாக வெவ்வேறு பொருள் தருவனவாக உள்ளனவே! உடலுறுப்புக்களான கை, கால், பாதம் என்பது போல உள்ளனவே! அவை ஒரே வஸ்துவின் பலவிதப் பெயர்களாக அமையவில்லையே! அவ்வாறிருக்க, சஞ்சலமான மனது 'ஏக வஸ்து' அனுபவத்தில் எவ்வாறு நிலைபெற முடியும்?

விடை: நீரினிடத்தில் குளிர்ச்சி, நெகிழ்ச்சி, தெளிவு என்ற குணங்களிருப்பதால் நீர் மூன்று பொருள்கள் என்று கூறலாமா? அல்லது உஷ்ணம், பிரகாசம், செந்நிறம் என்ற மூன்று குணங்களும் இருப்பதால் நெருப்பு மூன்று பொருள்களாகிவிடுமா? அவ்வாறு ஆகாது.

அதுபோல இவ்வுலகமானது அசத்து, ஜடம், துக்கம் ஆகியவற்றை வெவ்வேறாக அறியும் பொருட்டு, அவற்றிற்கு மாறாய் ஏகவஸ்துவிற்கு சத்து, சித்து, ஆனந்தம் என்ற முக்குணங்களும் உண்டு என்று வேதம் கூறுகின்றதே தவிர சத் சித் ஆனந்த ஸ்வரூபமான பிரம்மம் ஒன்றேயாகும்.

60. வினா: வேதம் பிரம்மத்தை எப்பெயர்களில் வருணிக்கிறது?

விடை: வேதம் பிரம்மத்தைப் பல பெயர்களில் வருணிக்கிறது. அவை: நித்யம், பூரணம், ஏகம், பரமார்த்தம், பரப்ரம்மம், நிதானம், சாந்தம், சத்யம், கேவலம், துரியம், சமம், திருக்கு, கூடஸ்தன், சாக்ஷி, போதம், சுத்தம், லக்ஷியம், சநாதனம், ஜீவன், தத்துவம், விண், ஜோதி, ஆத்மா, முக்தம், விபு, சூட்சமம் என்பன. வேறுவிதமாகக் கூறுவதானால் நிஷேதம் அல்லது விலக்கு நாமங்களில் பிரம்மம் வருணிக்கப்படுகிறது. அந்நாமங் களாவன: அசலம், நிரஞ்சனம், அமிர்தம், அப்பிரமேயம், விமலம், வசனாதீதம், அஜடம், அநாமயம், அசங்கம், அதுலம், நிரந்தரம், அகோசரம், அகண்டம், அஜம், அனந்தம், அவிநாசி, நிர்க்குணம், நிஷ்களம், நிரவயவம், அநாதி, அசரீரம், அவிகாரம், அத்வைதம் என்பவை.

இவ்வாறு விதியும் விலக்குமாகிய குணங்களால் விளக்கப்படும் வஸ்து ஒன்றே. சத், சித், ஆனந்தம் என்னும் குணங்களைக் குறிக்கும் வார்த்தைகளுக்குப் பிரம்மம் என்றே பொருளாகும். இது வேதப் பிரமாணமாகும்.

இவ்வுண்மையைத் தெரிந்து கொண்டு, சந்தேகங்களை விட்டொழித்துப் பூரண ஸ்வரூபத்தில் நிலைத்து நிற்க வேண்டும்.

61. வினா: சுருதிகள் கூறும் இவ்வுண்மையை 'யுக்தி வாதப்படி'யும் (logical argument) விளக்கிக் கூற முடியுமல்லவா?

விடை: யுக்தி வாதப்படி விளக்கம்:

சத்தாக (being) உள்ள பொருளே சித்தாக (consciousness) பிரகாசிக்கிறது.

சத்தும் சித்தும் வெவ்வேறாயின் சித் என்பது இருப்பு அற்றுப்போம். அப்படியானால் சித்தாகிய ''நான்'' எனும் சாட்சி முயற்கொம்பு போலாகி அனுபவமாக உணர முடியாதல்லவா? மேலும், சித்தும் சத்தும் வெவ்

வேறாயின், சத் என்பது சேதனமற்ற ஜடமாக வேண்டும். அப்படியானால் திருசிய விஷயங்களைப் போன்று சத்தும் விளக்கமற்று இருக்க வேண்டும். (அதாவது கயிற்றில் ''மறைந்து இருக்கும்'' பாம்பு, காண்பானன்றி விளங்காதது போல). இவ்விரண்டு அனுமானங்களும் ''நான்'' என்னும் நம் இருப்புணர்வுக்கு விரோதமாகலின் சத்தும் சித்தும் ஒன்றே என்றாகிறது.

இவ்வாறு சத்தும் சித்தும் ஏக வஸ்துவாகத் தோன்றுவது எதுவோ அதுவே ஆனந்தமாகும். ஏனெனில் அவ்வானந்தம் சத்சித்தினின்றும் வேறு என்று கூறினால், அவ்வானந்தம் இருப்பிலாத சுயவிளக்கமில்லா ''பொருளாகிறது''. அதாவது முயற்கொம்பு போலவும், கயிற்றரவு போலவுமாகிறது. அப்படியாயின், நம் அனுபவமாக உள்ள சுகம் என்பது ஏற்படவே கூடாது என்ற அனர்த்தம் ஏற்படுகிறது. ஆதலின் ஆனந்தம் என்பது சத்சித்தினின்றும் பிரிக்க முடியாதது என்றாகிறதல்லவா?

62. **வினா:** சத் சித் ஆனந்தமான வஸ்து 'பிரம்மம்' என்பதை அனுபவ பூர்வமாக (Experience) எப்படி அறியலாம்?

**விடை:** சுழுப்தி (தூக்க) அவஸ்தை ஒருவனுக்கு ஆனந்தத்தைக் கொடுக்கிறது. அவன் கண்விழித்தபின் 'ஆனந்தமாக'த் தூங்கினேன் என்று ஸ்மிருதி (நினைவு) ரூபமாகக் கூறுகிறான்.

இவ்வாறு அவன் நினைவு கொண்டு கூறும் ஆனந்தமே அறிவாகும்; அதுவே 'சித்' ஆகும். அவன் சுழுப்தி நிலையில் அனுபவித்த ஆனந்தத்தை விளக்கி வைக்க வேறு ஒரு பிரகாசம் இல்லை என்பதை அறிக.

சுழுப்தி அவஸ்தையில் மனம் ஒடுங்கி இருக்கிறது. அந்நிலையில் அறிவு அஞ்ஞான இருளை அறிகிறது.

இதே போல விழிப்பு நிலையிலும் மனம் இறந்து 'அறிவு மயமாய்' இருப்பதே ஜீவன் முக்த நிலையாகும்.

கடலில் அலையும், நுரையும் தோன்றுவது போல, அகண்ட பரிபூரண சத் சித் ஆனந்த பிரம்மத்தில் உலகமெல்லாம்

கற்பிதமாய்த் தோன்றியிருப்பதால் உலகங்களைச் 'சித்திரம்' என்று கைவல்ய நவநீதம் வருணிக்கிறது. சித்திரத்திற்கு ஆதாரமாய் விளங்கும் திரையே பிரம்ம மாகும். இதுவே ஜீவன் முக்தன் பெறும் அகண்டாகார அனுபவமாகும்.

இதுவே 'துரியாதீதம்' அல்லது 'ஏழாம்பூமி' என்னும் 'முக்கிய' பதமாம். 'ஜாக்ரத்-சுழுப்தி நிலை' (மனம் இறந்த விழிப்பு நிலை) எனப்படுவதுமிதுவே.

63. **வினா:** 'அஞ்ஞான பூமிகள் ஏழு' என்பன யாவை?

**விடை:** அஞ்ஞான பூமிகள் ஏழு, அவை

பீஜஜாக்ரம் என்ற வித்து நனவு: மனிதன் தூக்கம் கலைந்து விழிப்பு நிலைக்கு வரும்போது தனது உடலைப் பற்றிய உணர்வு வராமல் 'நான்' என்ற ஓர் அற்ப உணர்ச்சி மட்டுமே ஏற்படுகிறது. இது வித்திலிருந்து கிளம்பும் முளை போன்றது. ஜாக்ரத் நிலைக்கு வர இந்த அற்ப உணர்வு வித்தாக இருப்பதால் இது பீஜ ஜாக்ரம் எனப்படுகிறது.

**ஜாக்ரம் என்ற நனவு:** தூக்கம் கலைய ஆரம்பித்து, உடலுணர்வு, இட, கால உணர்வு ஆகியவை மட்டும் பழையபடி ஏற்படும் நிலையே ஜாக்ரம் எனப்படுகிறது.

**மகாஜாக்ரம் என்ற மகா நனவு:** பிறகு நான், எனது என்ற அகங்கார மமகாரங்கள் திடமாகவும், முழுவதுமாக ஏற்படும் பூரண மனச்சலன நிலையே மகாஜாக்ரம் எனப்படுகிறது.

**ஜாக்ர ஸ்வப்னம் என்ற நனாக்கனவு:** ஒருவன் விழிப்பு நிலையில் தான் அறிந்தவைகளையும் அறியாதவை களையும் பற்றி நினைத்து மனோராஜ்யம் செய்யும் 'பகற்கனவே' ஜாக்ர ஸ்வப்னம் எனப்படுகிறது.

**ஸ்வப்னம் என்ற கனவு:** ஒருவன் விழிப்பு நிலையில் அனுபவித்தவைகளையும், அனுபவிக்காதவைகளையும் பிறகு கனவாகக் காண்பதே ஸ்வப்னம் எனப்படுகிறது.

**ஸ்வப்ன ஜாக்ரம் என்ற கனா நனவு:** ஒருவன் கனவில், முன்பு கண்டு மறந்து போன நிகழ்ச்சிகளை மீண்டும் விழிப்பு நிலையில் காண்பதே ஸ்வப்ன ஜாக்ரம் எனப்படுகிறது.

**சுழுப்தி என்ற உறக்கம்:** இது கனவற்ற ஆழ்ந்த தூக்க நிலையாகும். கருவி கரணங்கள் யாவும் ஒடுங்கி அஞ்ஞான இருள் மூடியிருக்கும் தூக்க நிலையே சுழுப்தி எனப்படுகிறது. (பாடல் 247)

64. **வினா:** ஞானபூமிகள் ஏழு என்பன யாவை?

**விடை:** ஞான பூமிகள் ஏழாகும்: அவை:

**சுபேச்சை:** தீயோர் நட்பை நீத்து, சுபத்தைத் தரக்கூடிய மோட்ச இச்சை கொள்ளுவதே 'சுபேச்சை' எனப் படுகிறது.

**விசாரணை:** பெரியோர், குரு ஆகியோரின் சத்சங்கம் பெற்று, சாஸ்திர விசாரணை செய்து ஞானம் பெற அப்பியசித்தல் 'விசாரணை' எனப்படும்.

**தனுமானசி:** சாஸ்திர ஆராய்ச்சியாலும், குரு உபதேசத் தாலும் வைராக்யம் பெற்று, உலகம் அநித்யமானதென்று உணர்ந்து உலகப்பற்றுதல்களை விட்டுவிடுதல் ''தனுமானசி'' எனப்படுகிறது.

**சத்துவாபத்தி:** சத்சங்கம் பழகிய மனதுடன் உலகம் அனைத்தும் மாயை என்பதை உணர்ந்த மனதில் உண்மை அறிவு உதித்தலே 'சத்வாபத்தி' எனப்படுகிறது.

**அசம்சத்தி:** இது விஷய சம்பந்தமின்றி இருத்தலாகும். மனம் உண்மை வஸ்துவில் நிலைபெற்று, சங்கற்பங்களை விட்டு, மாயா காரியங்களான விஷயங்கள் அனைத்தி லிருந்தும் விலகி 'சாட்சாத்காரம்' பெறக்கூடிய பக்குவ நிலை பெறுதலே 'அசம்சத்தி' எனப்படுகிறது.

**பதார்த்தாபாவனை:** சமாதி அப்பியாசத்தால் திரிபுடிகள் நீங்கப்பெற்று அத்வைத ஆனந்தம் எய்துவதே 'பதார்த்த அபாவனை' எனப்படுகிறது.

**துரியம்:** ஜாக்ரம், ஸ்வப்னம், சுழுப்தி ஆகிய மூன்று அவஸ்தைகளுக்கும் அப்பாற்பட்டதே துரிய பூமியாகும். சாட்சாத்கார நிலையில் அழுந்தி பூரண மௌனமாகி நிர்விகல்ப சமாதியை எய்துவதே துரியம் எனப்படுகிறது.

**துரியாதீதம்:** துரியத்திற்கும் அப்பாற்பட்ட நிலையே துரியாதீதம் எனப்படுகிறது. விதேக கைவல்யத்தை வேதாந்திகள் துரியாதீதம் என்கின்றனர். (பாடல் 250)

65. **வினா:** ஞான பூமிகள் ஏழைப்பற்றிய விளக்கங்கள் தருக.

**விடை:** சுபேச்சை, விசாரணை, தனுமானசி என்ற முதல் மூன்று பூமிகளையும் அடைந்தோர் சாதகர்கள் ஆவார்கள்; அவர்கள் ஜீவன் முக்தர்கள் அல்லர். சத்துவாபத்தி என்ற நான்காவதான நடு பூமியில் உள்ளோர், பிரம்ம வித்துக்கள் என்ற முக்தர்கள் ஆவார்கள். அசம்சத்தி, பதார்த்தா பாவனை, துரியம் என்ற பின் மூன்று பூமிகளில் ஏறினோர், முறையே பிரம்மவித்வரன், வரியான், வரிஷ்டன் என்ற ஜீவன் முக்தர்களாவார்கள்.* முதல் பூமியாகிய சுபேச்சையை அடைவதே கஷ்டம். இம்முதல் பூமி கைவசமானால் மோட்சமும் கைவசமானதாகும்.

முதல் மூன்று பூமிகளை மட்டும் அடைந்து இறப்பவர்கள் மேலான சுவர்க்கம் முதலிய பதவிகளையடைந்து பிறகு ஒரு நல்ல குடும்பத்தில் பிறந்து, கிரமமாக மோட்சமடைவார்கள். முதல் இரண்டு பூமிகளில் இருந்து சஞ்சரிப்பவர்கள் கீழான பிறவியை உடையவர்களானாலும் அவர்களும் மேற்கூறிய கிரமமாக முக்தராவர். இதை மறுப்பவர் மகா பாவத்தை அடைவார். வேதமே இதற்குப் பிரமாணம்.

66. **வினா:** குடும்பத்தைத் துறந்து துறவியாகத் தனித்திருப்பவரைத்தவிர மற்ற இல்லறத்தார் மோட்சமடைய இயலாது என்பது சரியா?

---

* நால்வகை சீவன் முக்தரைப் பற்றி தத்துவ விளக்கப் படலத்திற் காண்க

விடை: பந்தமறுக்கும் சந்நியாசம் நான்கு வகைப்படும். அவை குடீசகம், பகூதகம், ஹம்ஸம், பரமஹம்ஸம் என்பன. குடும்பத்தை விட்டு நீங்கும் சந்நியாசத்திற்கு மனதில் உண்டாகும் விராகமே (நிராசை) காரணமாகுமே யன்றி காவியாடை முதலிய வேஷங்கள் காரணமாகா.

விராகம் மூன்று விதமானதாகும். அவை மந்தவிராகம், தீவிர விராகம், தீவிரதர விராகம் என்பன.

**மந்தவிராகம்:** மனைவி, மக்களை இழந்தோ, அல்லது குடும்பத் தொல்லைகளாலோ ஏற்படும் விராகம் மந்த விராகம் எனப்படும். இதனால் ஏற்பட்ட துறவு பலிக்காது.

**தீவிர விராகம்:** மனைவி, மக்கள், செல்வம் இப்பிறப்பில் பந்தங்களே, ஆதலால் எதுவும் வேண்டாமென்று வெறுத்து விடுவது தீவிர விராகத்தினாலாகும்.

**தீவிர தர விராகம்:** கர்ம காண்டம் கூறும் இகபர சுகங்கள் நிலையற்றவையென்று அவற்றை வெறுத்து ஞான நாட்டம் பெறுவதே தீவிர தர விராகமாகும்.

இவற்றில் தீவிர வைராக்யம் குடீசகம், பகூதகம் என்ற இருவகை துறவுக்குக் காரணமாகும்.

**குடீசகம்:** எங்கும் யாத்திரை செய்யத்தக்க உடல்வலிமை இல்லாதவர்களுக்குரியது குடீசகம் என்ற வைராக்யம்.

**பகூதகம்:** பல க்ஷேத்ரங்களுக்கும் யாத்திரை செய்யச் சக்தியுள்ளவர்களுக்குரியது பகூதகம் என்ற வைராக்யம்.

மூன்றாவதான தீவிரதர வைராக்யத்தில் ''ஹம்சன்'' என்றும் ''பரமஹம்சன்'' என்றும் இருவகை துறவியர் உண்டு. ஹம்ச சந்நியாசிக்கு முக்தி என்பது, சத்திய லோகத்தைக் கிரமமாக அடைந்தே கிட்டும். பரமஹம்ச சந்நியாசிக்கு இப் பிறப்பிலேயே, முக்தி சித்திக்கும்.

பரமஹம்ச சந்நியாசிகளிலும் ஜிஞ்ஞாசு, சுஞ்ஞானவான் என இருவகையினர் உண்டு.

ஜிஞ்ஞாசு (ஞானவேட்கையுடையவன்) பரமஹம்சன் என்பவன் ஞான பூமிகளில் (சுபேச்சை, விசாரணை,

தனுமானசி என்ற) முதல் மூன்று பூமிகளில் சஞ்சாரம் செய்து விவேகமடைந்து இப்பிறப்பிலே முக்தியடைவான்.

சுஞ்ஞான பரமஹம்சன் என்பவன் சாதனையின்றி நேராகவே ஜீவன்முக்தனான மேலோனாவான்.

இஜ்ஜிஞ்ஞாசுகளில் இருவகையினர் உண்டு. ஒரு வகையினர் இல்லறத்தைத் துறந்து, துறவியாகி பிரம்ம ஞானமடைவர்.

மற்றொரு வகையினர் சந்நியாஸம் மேற்கொள்ளாமல் தங்கள் வர்ணாஸ்ரம தர்மப்படி இல்லறத்திலிருந்து கொண்டே அகத்துறவு உள்ளவர்களாகக் குருவையடைந்து ஞானம் பெறுவர்.

எனவே முக்தி பெறுவதற்கு விராகத்தால் வரும் சாந்தியே காரணமின்றி இல்லறமோ, துறவறமோ காரணமல்ல வென்றறிக.

இவ்வாறு சாஸ்திரங்களில் கூறப்பட்டதும் உலகியலில் கண்கூடாகக் கண்டதையும் உன்சுய அனுபவத்தையும் கொண்டு (அதாவது சாஸ்திரமாகிய சுருதி, யுக்தி, அனுபவங்களால்) அறிந்து, சந்தேகங்கள் நீங்கப் பெற்று ஆனந்த நிலையை எய்த வேண்டும்.

67. **வினா:** பூரணமாக இருந்து கொண்டு பூரணானந்தத்தை எப்படி அனுபவிக்க முடியும்?

*(வித்தியானந்தத்தை விளக்கும்)* **விடை:** ஜாக்ரம், ஸ்வப்ன, சுழுப்தி ஆகிய மூன்று அவஸ்தை களுக்கும் காரணமான மனோ விருத்திகளைத் தள்ளி, பூரண ஞான நிலையில் நின்று நிரதிசயானந்தத்தை அனுபவிக்க இயலும்.

68. **வினா:** பழக்க வாசனையால் வருகின்ற விருத்திகள் அனைத்தையும் எப்படி ஒடுக்குவது?

**விடை:** ஞான விசாரத்தால் விருத்திகளை ஒடுக்க வேண்டும்; மனம், புத்தி ஆகியவற்றை உனது ஏவலாளர்களாகச் செய்து கொண்டு அவற்றை அடக்கி ஆள வேண்டும்.

69. வினா: விருத்திகளை ஒடுக்க வேறு உபாயம் உண்டா?

விடை: யோகத்தினால் பிராணனை அடக்கினால் விருத்திகள் அடங்கும். பிராணன் அடங்கினால் மனமும் அடங்கும். அப்படிச் செய்யமனமில்லை எனின் காரண தேகமாகத் தடித்த அவித்தையை நீக்கினால் விருத்திகள் ஒடுங்கும்.

70. வினா: அவித்தையைக் களையும் உபாயம் என்ன?

விடை: அவித்தையான காரண தேகம் ஒழிய வேண்டு மானால் மகா வாக்கியத்தை உள்ளத்தில் இருத்தி, குரு உபதேசப்படி நடந்தால் சர்வம் ப்ரம்ம மயம் என்ற அனுபவம் உண்டாகும்.* அந்நிலையில் ஜகத், ஜீவன் ஆகியவையெல்லாம் தன் சொரூபத்தில் ஆரோபமானவை, தன்னிடத்திலிருந்தே அவை தோன்றி யுள்ளன, என்ற உறுதி ஏற்பட அவித்தை ஒழிந்து போகும்.

71. வினா: சர்வம் ப்ரம்ம மயம் என்ற ஞானம் ஏற்பட்டிருக்கிறது என்பதற்கான அடையாளங்கள் யாவை? மேலும் மனம் விவகாரங்களில் அலைவதால் 'சர்வம் ப்ரம்ம மயம்' என்ற ஞான நிலையில் நிற்பது எப்படி சாத்யமாகும்?

விடை: ஞானிக்குத் தன் ஸ்வரூபத்தைத் தவிர வேறொரு வஸ்துவும் இல்லை; அவன் காணும் காட்சிகளையெல்லாம் தனது ஸ்வரூபமாகவே காண்பான். திருஸ்யங்கள் எல்லாம் கனவு போல் கற்பிதமானவை என்று உணர்ந்து அவற்றைக் காண்கின்ற சைதன்யமே தான் என்ற அனுபவ ஞானத்தில் ஞானி நிலைத்திருப்பான்.

முடிவுரை:

(1) 'பிரஞ்ஞானம் பிரம்மம்' என்பது ரிக்வேத மகாவாக்கிய மாகும் (ஐதரேய உபநிஷத்). ஞான வடிவமாக இருப்பதே பிரம்மம் என்பது இதன் பொருள்.

---

* இதுவே 52ம் வினாவிடையிற் கண்ட வித்யாநந்தத்தின் விளக்கமாம்.

ஹை. ஏ.ஸ்வரதே.



(2) 'அகம் பிரம்மாஸ்மி' என்பது யஜுர் வேத மகாவாக்கிய மாகும் (பிரஹதாரண்ய உபநிஷத்). ஆத்மாவே பிரம்மமாக இருக்கிறது என்பது இதன் பொருள்.

(3) 'தத்வமஸி' என்பது சாம வேத மகாவாக்கியமாகும் (சாந்தோக்ய உபநிஷத்). நீ அதுவாய் இருக்கிறாய் என்பது இதன் பொருள்.

(4) 'அயம் ஆத்மா பிரம்மம்' என்பது அதர்வண வேத மகாவாக்கியமாகும் (மாண்டூக்ய உபநிஷத்). இந்த ஆன்மா பிரம்மம் என்பது இதன் பொருள்.

இவ்வாறு வேத வாக்கிற்கிணங்க, குரு அனுக்கிரகத்தால் சர்வமும் பிரம்ம மயம் என்னும் அனுபவமுண்டானால் அவித்தை நசித்து போகும். நான் சுத்த சைதன்ய வஸ்து, பரிபூரண வஸ்து என்ற உறுதி நிலைத்து விட்டால், நீ எக்கருமங்களைச் செய்தாலும் அவை உன்னை பந்தப் படுத்த மாட்டா.

இந்த ஞான நூலைக் கற்றுத் தெளிந்தவர்கள், பலப்பல ஞான சாஸ்திரங்களை அனுஷ்டித்த பலனைப் பெற்று கைவல்ய பதவியைப் பெறுவது உறுதியாகும்.



“படர்ந்த வேதாந்தம் என்னும் பாற்கடல் மொண்டு முன்னூல் குடங்களில் நிறைத்து வைத்தார் குரவர்கள் எல்லாங் காய்ச்சிக் கடைந்தெடுத்து அளித்தேன் **கைவல்ய நவநீதத்தை** (வெண்ணையை). (இதனை) அடைந்தவர் விஷயமண் தின்று அலைவரோ” — என்று இந்நூல் விஷயத்தை, நூலாசிரியரான ஸ்ரீமத் தாண்டவராய சுவாமிகள் (ஐநூறு ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தவர்) விளக்குகின்றார்.

“பிரம்ம பாவனையை மூடிப் பேதங் காட்டுவது **அஞ்ஞானம்**”

“குரவன் வாக்கியம் நம்பாமல் குழம்புவது **சந்தேகம்**”

“திரமறு ஜகம் மெய்யென்றும் தேகம் நானென்றும் விரவிய மோகம் **விபரீதம்**” — ஆகையால், மகாவாக்கியார்த்தத்தை கேட்டல், சிந்தித்தல், தெளிதலாலே மோக்ஷ சுகத்தை அடைவாய் என்றும் உய்யவே முக்தி நல்கிய குருவுக்கு நாம் ஆற்றும் நன்றிக்கடன், “சொரூபஞான நிஷ்டனாயிருப்பதே” என்றும்,

மற்றும் மாயையைப் பற்றிய அடியார்களின் சந்தேகங்கள் தெளிவுற பகவான் ஸ்ரீ ரமணர் இந்நூலிலிருந்து மேற்கோள்கள் காட்டியதுண்டு. ஆன்மதாகங் கொண்ட முமுட்சுக்களுக்கு இன்றியமையாத நூலாக இந்நூல் விளங்குவதால், அன்பர்கள் இதனை ஓதியுணர்ந்து சந்தேக விபரீதங்கள் நீங்கி சொரூபானந்தக் கடலில் மூழ்கித் திளைப்பாராக!